# முல்லை மணம்

(கட்டுரைகள்)

★

கி. வா. ஜகந்நாதன்

★

அமுத நிலயம் பிரைவேட் லிமிடெட்
தேனும்பேட்டை :: சென்னை-18.

# முகவுரை

இலக்கியத்தைச் சுவைக்கப் பல வழிகள் உண்டு. பெரிய காப்பியங்களைப் படித்து அவற்றின் கட்டுக்கோப் பழகையும் பாத்திரச் சிறப்பையும் தெரிந்துகொள்வதனால் மிகப் பெரிய இன்பம் உண்டாகும். தனியாகச் சில பாடல் களை ஆழ்ந்து பயின்று சுவை காணுவது ஒரு முறை. இதில் வரும் இன்பம் மிகப் பெரிது என்று கூற இயலாவிட்டாலும் ஓரளவுக்கு இன்பம் உண்டாகிறது. சொற்சுவை பொருட் சுவையை நுகர அத்தகைய பாடல்களும் கருவியாக இருக்கும்.

இந்த நூலிலுள்ள கட்டுரைகளில் பல, சில பாடல்களை நுகர்ந்து சுவைத்ததன் விளைவாக எழுந்தவை. சில கட்டுரை கள் இலக்கியங்களினூடே காணக் கிடைக்கும் அரிய கருத் துக்களைச் சொல்பவை. வீரம், காதல், தத்துவம் முதலிய பல துறைகளில் அமைந்த பாடல்களை இக் கட்டுரைகளினி டையே காணலாம். அவ்வப்போது பல பத்திரிகைகளில் எழுதியவை இவை. தமிழ் இலக்கியத்தில் நேரே புகும் ஆற்றல் இல்லாதவர்களுக்கு இவை சுவை தருமென்று நம்பு கிறேன். இவற்றில் வரும் பாடல்களை உணர்ந்து சுவை கண்டவர்கள் மூல நூல்களையே படிக்கும் ஆர்வத்தைப் பெற வேண்டும் என்பது என் கருத்து.

'காந்தமலை'
கல்யாண நகர்
சென்னை-28

கி. வா. ஜகந்நாதன்
8—1—59

# பொருள் அடக்கம்

# முல்லை மணம்

கோசல நாட்டைக் கம்பன் வருணிக்கிறான். இயற்கை அழகு நிரம்பிய அந்த நாட்டு மகளிரும் மைந்தரும் அழகும் அறிவும் சான்றவர்கள். அவர்களுடைய பழக்க வழக்கங்களை நாட்டுப் படலம் சொல்கின்றது. இளைய பெண்கள், இன்னும் மணம் ஆகாதவர்கள், மான்குட்டிகளைப் போலத் துள்ளி விளையாடுகிறார்கள்; பலர் சேர்ந்துகொண்டு விளையாடுகிறார்கள்.

மலர் நிரம்பிய பொழில்களும் மணம் நிரம்பிய தோட்டங்களும் அவர்கள் விளையாடும் இடங்கள். நல்ல காற்று மணத்தை அள்ளி வீச, திறந்த வெளியிலே பந்தாடுகிறார்கள். அக் காலத்தில் பந்தாடுதல் மகளிருக்கே உரிய விளையாட்டாக இருந்தது. சந்தன மரங்களை ஓரக்காலில் வைத்து வளர்த்திருக்கிறார்கள். அத்தகைய இடத்தில் பந்தாட்டம் நடைபெறுகிறது. மகளிர் பந்தாடும் இடமாக விளங்குகிறது சந்தன வனம்.

இளைஞர்கள், இன்னும் மணம் ஆகாத கட்டிளங் காளையர், பல கலைகளையும் பயில்கிறார்கள். மணமும் அழகும் நிரம்பிய நந்தனவனங்களில் அவர்கள் பயிற்சி பெறுகிறார்கள். கல்லாலும் மண்ணாலும் எடுத்த மாளிகைகளில் அல்ல; கொடியும் செடியும் மலரைத் தாங்கி நிற்கும் நந்தன வனங்களினிடையே சாலைகள் அமைந்திருக்கின்றன.

அந்தச் சாலைகளில் அவர்கள் இருந்து கலை பயில்கிறார்கள். நல்ல காற்று வீசும் சூழலிலே உடம்புக்கும்

உள்ளத்துக்கும் உரம் ஏறுகிறது. இளமையும் அழகும் நிரம்பிய அவர்களைப் பார்த்தால், 'முருகன் பல உருவங்களை எடுத்து எழுந்தருளி யிருக்கிறனோ?' என்று தோன்றும். அவர்கள் திருமேனி அழகுடையவை; அவர்கள் பயிலும் கலையும் அழகியது; அவர்கள் தங்கும் இடமோ சால அழகியது.

மகளிர் பந்தாடும் இடமும் மைந்தர் கலை பயில் இடமும் இன்னவை என்பதை ஒரு பாட்டில் கம்பன் சொல்கிறன்.

> பந்தினை இளையவர் பயில்இடம், மயில்ஊர்
> கந்தனை அனையவர் கலைதெரி கழகம்,
> சந்தன வனம், அல சண்பக வனமாம்;
> நந்தன வனம், அல நறைவிரி புறவம்.[1]

'பந்து விளையாட்டை இளைய மங்கையர் பயிலும் இடங்கள் சந்தனவனம் அல சண்பக வனமாம்; கந்தனை அனைய மைந்தர் கலைதெரி கழகம் இருக்கும் இடங்கள் நந்தனவனம் அல நறைவிரி புறவம்' என்று கூட்டிப் பொருள் செய்ய வேண்டும்.

[இளையவர் - இளைய மகளிர்; கழகம் - கல்விச் சாலை; நறை விரி புறவம் - மணம் பரவுகிற முல்லைத் தோட்டம்.]

இளைய மங்கைமார் பந்தினை விளையாடும் இடங்கள் பெரும்பாலும் சந்தனவனங்கள்; அப்படி அல்லாதவை சண்பக வனங்கள்; அதாவது, அவர்கள் சந்தன வனத்தி லும் சண்பக வனத்திலும் பந்தாடி விளையாடுகிறர்கள். அவர்கள் கண்ட இடங்களில் விளையாடுவதில்லை; வீட்டுக் குள்ளே அடைந்து கிடப்பதும் இல்லை. மணம் வீசும் சூழ் நிலையில் தென்றல் மணக்கும் பொழிலில் விளையாடுகிறர்

1. கம்பராமாயணம், நாட்டுப். 48.

கள். ஒன்று சந்தனமரச் சோலையிலே விளையாடுவார்கள்; அல்லது சண்பகப் பூம்பொழிலில் ஆடுவார்கள்.

கந்தனை அனைய காளையர் கலைகளை ஆராய்ச்சி செய்யும் கழகங்கள் நந்தன வனங்களில் உள்ளன. இல்லையேல் மணம் விரியும் முல்லை வனங்களில் உள்ளன. பன்மலர்க் கொடியும் செடியும் நிரம்பிய நந்தனவனமும் முல்லை வனமுமே அவர்கள் கலை பயில இடங் கொடுக்கும் கல்லூரி கள். பிற இடங்கள் அல்ல.

இளம் பருவ மகளிரும் மைந்தரும் அழகும் உடல் நலத்துக்கு ஏற்ற வளப்பமும் உடைய இடங்களில் விளை யாட்டும் கலையும் பயில்வதனால் உரம் பெறுகிறார்கள்; அழகு பெறுகிறார்கள்.

இப்படி விரிக்கும்படியாக இந்தப் பாட்டுக்குப் பொருள் செய்வது வழக்கம். 'இளையவர் பயிலிடம் சந்தன வனம்; அவை அல்லவை சண்பகவனம். கந்தனை அனையவர் கலைதெரி கழகம் நந்தனவனம்; அல்லவை புறவம்' என்று கூட்டிப் பொருள் கொண்டு விரிக்கும் உரை இது.

*

இவ்வாறு அன்றி இதற்கு நுட்பமான வகையில் வேறு ஓர் உரையைத் தம் ஆசிரியராகிய திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் சொன்ன தாக மகாமகோபத்தியாய டாக்டர் ஐயரவர்கள் ஓரிடத்தில் எழுதியிருக்கிறார்கள். அந்த உரையைப் பார்க்கலாம்.

மகளிர் விளையாடும் இடங்கள் சந்தன வனங்கள்தாம்; ஆனால் அருகில் சென்று பாராதவர்களுக்கு அவை சந்தன வனமாகப் புலப்படாமல் சண்பக வனமாகப் புலப்படு மாம். அப்படியே மைந்தர் கலையை ஆராயும் இடம் நந்தன வனமாக இருந்தாலும், முல்லைக் காடாக எண்ணத் தோன்றுமாம். காரணம் என்ன தெரியுமா? மகளிருடைய மேனி சண்பக மலர் மணம் உடையது. பல மகளிர் சேர்ந்து

விளையாடும் இடம் சந்தன மரக் காடாக இருந்தாலும், அம் மகளிருடைய திருமேனி வாசனையால் சண்பக வனத்தின் மணம் வீசும். ஆகையால், 'அவை சந்தனவனம் அல்ல; சண்பக வனங்களே' என்று எண்ணும்படி நேரும். அவ்வண்ணமே மைந்தர் கலை தெரியும் இடம் பன்மலர் மணம் வீசும் நந்தனவனமாக இருந்தாலும் அவர்கள் திருமேனியில் முல்லையின் மணம் வீசுவதனால், பிற மணம் அடங்க முல்லை மணம் மீதூர்கிறது. அதனால், 'இது நந்தன வனம் அல்ல; முல்லை வனம் போலும்!' என்று எண்ணத் தோன்றும்.

இவ்வாறு மகாவித்துவான் பிள்ளையவர்கள் உரை கூறுவார்களாம். 'சந்தனவனம் அல்ல; சண்பக வனமாம். நந்தனவனம் அல்ல; புறவமாம்' என்று பொருள் கொள்வது அவர்கள் கருத்தென்று தெரிகிறது.

மகளிர் மேனியில் சண்பக மணம் வீசும் என்பதும், மைந்தர் மேனியில் முல்லை மணம் வீசும் என்பதும் ஆகிய நுட்பமான உண்மைகளை அடிப்படையாக வைத்து எழுந்த உரை இது. உத்தம மகளிர் மேனி இயற்கையான மணம் உடையது என்பதும், அது சண்பக மலர் மணம் உடையதென்பதும் நூல்களில் கண்டவை.

ஆடவர் மேனி முல்லை மணம் உடையது என்பது அருமையான செய்தி. இதனைக் கம்பன் சொல்வதற்கு முன்பே பழைய தமிழ்ப் புலவர்கள் ஆண்டிருக்கிறார்கள்; பின் வந்த புலவர்களும் சொல்லியது உண்டு. அவற்றை இனிப் பார்க்கலாம்.

## 2

ஒரு காதலன் ஓர் அழகிய மகளைக் காதலித்தான். புறத்தார் அறியாமல் அவர்கள் அன்பை வளர்த்தார்கள். நாள்தோறும் அவர்கள் சந்திக்க முடியாமல் போகும்.

காதலி நினைத்தபோது தனியே வர இயலாமற் போகும் சமயங்களில் அவர்களுடைய சந்திப்பு நிகழாது. அப்படியே தனக்குரிய கடமைகளை ஆற்றும் பொருட்டுக் காதலன் வரமுடியாமற் போகும் சமயங்களிலும் சந்திப்பு நேராது. சந்திக்க இயலாமல் இருந்த நாட்களிலெல்லாம் இருவரும் மிக்க துன்பத்தை அடைவார்கள். காதலனாவது பல கடமைகளைச் செய்து பொழுது போக்குபவனாதலால் அந்தத் துன்பத்தை மறக்கும் செவ்வி அவனுக்குக் கிடைத்தது. அந்த இளம் பெண்ணோ, அவன் வராமல் இருப்பதை எண்ணி எண்ணிப் புழுங்கினாள்; அவனைப் பிரிந்திருக்கும் வாழ்வை வெறுத்தாள்; மனத்திலே எல்லை கடந்த வருத்தம் இருந்தாலும், அவள் அவ் வருத்தம் வெளியிலே தோன்றாதபடி மறைத்தாள்.

யாருக்கும் தெரியாமல் காதல் புரிந்த அவர்கள் பின்பு திருமணம் செய்து கொண்டு கணவன் மனைவியர் ஆயினர். தம் காதலை உலகினருக்குத் தெரியாமல் மறைக்க வேண்டிய அவசியம் இன்றி இப்போது நாடறியக் காதலையும் அறத்தையும் வளர்த்து வாழ்ந்தனர்.

காதலிக்கு ஒரு தோழி இருந்தாள். களவுக் காதல் செய்த காலத்தில் காதலி உள்ளுக்குள் வருத்தத்தால் குமைந்தாலும், தன் உணர்ச்சியை வெளியே தெரியாமல் அடக்கியதை அவள் உணர்ந்தவள். இப்போது காதலர் இருவரும் இணைபிரியாமல் ஒன்றி வாழ்வதையும், அவர்கள் காதல் உரமேறியிருப்பதையும் கண்டபோது, 'இப்படி இருக்க வேண்டியவள் அப்போது தன் மனத் துயரை எப்படித்தான் அடக்கினாளோ! மன ஆற்றல் உடையவள் இவள்!' என்று தோழி வியந்தாள்.

திருமணம் ஆனவுடனே அவர்கள் வீடு சென்று காதலியை நோக்கி, "உடம்பு மெலிவுறாமல், அழகு குலையாமல், பெண்மைக்குரிய புகழ் கெடாமல் உன் துயரத்தை மனத்

துள் தாங்கி ஆற்றி யிருந்தாயே! அது மிகவும் அரிய செயல்" என்று பாராட்டினாள்.

"நான் ஆற்றுவதற்குக் காரணம் என் மனவலிமை யென்றா கூறுகிறாய்? இல்லை இல்லை. என் காதலர் செய்த தண்ணளியே எனக்கு அந்த ஆற்றலைத் தந்தது. அவர் என்னிடம் வைத்திருக்கும் காதல், நினைக்குந் தோறும் இன்பம் தந்தது. அவர் எனக்குத் தந்த இன்பத்தை அவரைப் பிரிந்திருந்த போதெல்லாம் எண்ணி ஆறுதல் பெற்றேன்" என்றாள் காதலி. அவள் கூறுவதாகக் குறுந் தொகையில் ஒரு பாட்டு வருகிறது. அரிசில்கிழார் என்ற பெரும் புலவர் அதைப் பாடியிருக்கிறார்.

அவளைக் காதலித்த மணவாளன் ஒரு நாட்டுக்குத் தலைவன். சிறு சிறு குன்றங்களை உடைய நாடு அது. அந்தக் குன்றுகளில் சின்னச் சின்னச் சுனைகள் குழிவாக இருக்கும். கள்ளை ஊற்றி வைக்கும் கண்ணாடிக் குப்பி களைப் போலச் சிறிய வாயும் அகன்ற உள்ளிடமும் உடையவை அச் சுனைகள். அவற்றிற்குள்ளே தேரைகள் வாழும். மழைக் காலத்தில் அவை ஒலித்துக் கொண்டே இருக்கும். மலைப் பகுதிகளில் தினைக் கொல்லையைக் காக்கும் பெண்கள் குருவியையும் கிளியையும் ஓட்டத் தட்டை என்னும் கருவியை வைத்திருப்பார்கள். மூங்கி லைத் துண்டாக்கி அந்தத் துண்டில் கைப்பிடி உள்ள இடத்தைத் தவிர மற்ற இடத்தில் பிளந்து, தட்டும்போது பிளந்த பகுதிகள் ஒன்றோடொன்று மோதி ஒலிக்கும்படி செய்வது தட்டை. அதைத் தட்டினால் எப்படி ஒலிக்குமோ அப்படி யிருக்கும் தேரையின் ஒலி. சுனையில் பிளந்தாற் போன்ற வாயை உடைய தேரைகள் எப்போதும் ஒலிக்கும் நாட்டுக்குத் தலைவன் அவளுடைய காதலன்.

> மட்டம் பெய்த மணிக்கலத்து அன்ன
> இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
> தட்டைப் பறையிற் கறங்கும் நாடன்.

[மட்டம் - கள்; மணிக்கலம் - நீல நிறக் கண்ணாடிக் குப்பிகள்; இட்டுவாய் - இடுகிய வாய்; சுனைய - சுனையில் உள்ளனவாகிய; பகுவாய் - பிளந்தாற் போன்ற வாய்; தட்டைப் பறையின் - தட்டை என்னும் கிளிகடியும் கருவியைப் போல; கறங்கும் - ஒலிக்கும்.]

பல காலத்துக்குமுன் நடந்தது அது. முதல் முதல் காதலனைக் காதலி கண்டு இன்புற்றாள். அன்று நல்ல நிலா. நெடுநேரம் நிலா, தன் ஒளியை வீசியது. அவள் வாழ்க்கையிலும் அமுத நிலா ஒளி வீசத் தொடங்கிய நாள் அல்லவா அது? அதை அவள் வாழ்வு முழுவதும் மறக்காமல் நினைத்துக் கொண்டிருக்கிறாள். நிலாவில் எல்லாப் பொருளும் ஒரு மோகனச் சோபையோடு விளங்கின. அவளுக்கும் புதுப் பொலிவு உண்டாயிற்று. நீண்டு பருத்த தோளை அவள் அவ்வளவு காலம் தாங்கியதற்கு அன்று பயன் கிடைத்தது. அந்த மலை நாடன், அவள் நெடுந்தோளை மணந்தனன். ஆ! அந்த இன்பத்தை என்னென்று சொல்வது! அவன் தொட்ட தோளில் ஒரு புது இன்பம்; ஒரு பூரிப்பு: ஒரு குளிர்ச்சி. அவனைக் காணாத நேரமெல்லாம், அவன் அணைந்த தோளைத் தொட்டுத்தொட்டுப் பார்த்து மகிழ்ச்சியை அடைந்தாள். அதில் குளிர்ச்சி மாத்திரமா இருந்தது? அதில் ஒரு புது மணம், ஆம், அது முல்லையரும்பின் மணம் வீசியது. அவள் முல்லை மாலையை அணிந்து கொண்டாளா? இல்லையே! அவன் அணைந்த தோள் அது. அவன் திருமேனி முல்லை மணம் வீசுவது. அவன் அணைந்த தோளில் அந்த மணம் சார்ந்து இப்போது மணந்தது. அந்த மணம் அல்லவா அவளைக் காப்பாற்றியது?

அவனைப் பிரிந்திருக்க நேர்ந்த சமயங்களில் எல்லாம் அவள், 'நாம் நம் காதலனைச் சந்தித்தது கனவோ!' என்று ஐயுற்றதும் உண்டு. ஆனால், அவள் தோள் முல்லையின் மணத்தை வீசி, "இல்லை, இல்லை. அவன் உன்னை

மணந்தது உண்மை" என்று கூறியது. அன்று சார்ந்த மணம் இன்றும் மணந்தது.

இதைத் தன் தோழியிடம் சொன்னாள் காதலி:

மட்டம் பெய்த மணிக்கலத்து அன்ன
இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
தட்டைப் பறையில் கறங்கும் நாடன்
தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவின்
மணந்தனன் மன்நெடுந் தோளே;
இன்றும் முல்லை முகைநா றும்மே.[1]

[தொல்லை - பண்டு; மணந்தனன் - தழுவினான்; முகை - அரும்பு; நாடன் தொல்லை நெடுவெண்ணிலவில் தோள் மணந்தனன்; இன்றும் முல்லைமுகை நாறும்.]

"அன்று அவன் மணந்த என் தோளில் இன்றும் முல்லையரும்பு மணக்கிறது" என்ற அவள் கூற்றிலே, "ஆடவருடைய மேனி முல்லை மணம் உடையது" என்ற உண்மை பொதிந்திருக்கிறது.

## 3

இந்த உண்மையைக் குமர குருபர சுவாமிகள் ஓரிடத்தில் புலப்படுத்துகிறார். சிதம்பரச் செய்யுட் கோவை என்னும் நூலில் வருவது அது. சிதம்பரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் புகழை விரிக்கும் பாடல் அது.

சிவகாம சுந்தரி அருகில் நின்று நடராசப் பெருமானுடைய நடன அழகையும் திருமேனிப் பேரெழிலையும் பார்த்துப் பார்த்து இன்புறுகிறாள். மின்னலைப் போன்ற இடையை யுடைய மாதேவியாகிய அப் பெருமாட்டி விழி குளிரும்படி பொன் மன்றத்தில் நடம்புரியும் கூத்தப் பெருமானை நோக்கி முனிவர் பாடுகிறார்.

---

1. குறுந்தொகை, 193.

மின்செய்த சிறுமருங்குற்
பெருந்தேவி விழிகுளிர்ப்பப்
பொன்செய்த மணிமன்றில்
நடஞ்செய்த புகழோய்! கேள்.

[மருங்குல் - இடை; பெருந்தேவி - சிவகாமசுந்தரி; குளிர்ப்ப - குளிர்ச்சியடைய; மணிமன்று - அழகிய அம்பலம்.]

அம்மையின் கண் கயல் போலவும் மான் போலவும் வண்டு போலவும் இருக்கிறது. அந்தக் கண் இறைவன் அழகுத் திருமேனியிலே சுழன்று விளையாடுகிறது. அப்போது அவன் திருமேனி கயலுக்கு ஏற்ற கடலாகவும், மானுக்கு ஏற்ற முல்லைவனமாகவும், வண்டுக்கு ஏற்ற பூம்பொழிலாகவும் விளங்குகிறது.

"இறைவா, மணம் வீசும் மாலையை அணிந்த கூந்தலைப் பெற்ற பெருமாட்டியின் மையை உண்ட கண்ணாகிய இரட்டைக் கயல்மீன்களுக்கு உன் திருமேனி புதிய நீர் வெள்ளத்தையுடைய கடலாக இருக்கிறது" என்று புகழ்கிறார் குமரகுருபர முனிவர்.

முருகுயிர்க்கும் நறுந்தெரியல்
மொய்குழலின் மையுண்கண்
பொருகயற்குன் திருமேனி
புதுவெள்ளப் புணரியே!

[முருகு-மணம்; தெரியல் – மாலையை அணிந்த; பொரு கயல் - இரட்டைக் கயல்; புணரி - கடல்.]

அடுத்தபடி, மானுக்கு ஏற்ற முல்லை வனம் என்கிறார்.

தேன்மறிக்கும் வெறித்தொங்கல்
அறற்கூந்தல் திருந்திழைகண்
மான்மறிக்குஉன் திருமேனி
மலர்முல்லைப் புறவமே!

[தேன் குறுக்கிட்டு ஓடும் வாசனையையுடைய மாலையை அணிந்த, கருமணலை ஒத்த கூந்தலையும் திருத்தமான அணிகலன் களையும் பெற்ற சிவகாமசுந்தரியின் கண்ணாகிய மான் குட்டிக்கு உன் திருமேனி, முல்லை மலரையுடைய வனமாகும். மறிக்கும் - குறுக்கிடும்; வெறி - மணம்; தொங்கல் - மாலை; அறல் - கரு மணல்; இழை - ஆபரணம்; புறவம் - முல்லை மலர்.]

பிறகு இறைவன் திருமேனியைப் பூம்பொழில் என்கிறார்.

> பிறைஅளிக்கும் சிறுநுதல்அப்
> பெண்அமுதின் பேரமர்க்கண்
> சிறைஅளிக்குன் திருமேனி
> தேன்அளிக்கும் பொதும்பரே![1]

[பிறையை ஒத்த சிறிய நெற்றியை உடைய அந்தப் பெண்ண முதத்தின் பெரிய மோதும் கண்ணாகிய சிறகையுடைய வண்டுக்கு உன் திருமேனி, தேனைத் தரும் சோலையாகும். அளி - வண்டு; பொதும்பர் - சோலை.]

இந்த மூன்று உருவகங்களில் இரண்டாவது உருவகத் தில் முன்னே நாம் கண்ட கருத்து வந்திருக்கிறது. இறை வியின் கண்ணை மானாக உருவகம் செய்தவர், இறைவன் திருமேனியை முல்லை மலர் நிரம்பிய காடாகச் சொல்கிறார்.

"திருந்திழைகண் மான்மறிக்கு உன் திருமேனி மலர் முல்லைப் புறவமே!" என்கிறார். இங்கே மான் என்றதற்காக ஏதோ ஒரு வனத்தைச் சொன்னார் என்று எண்ணக் கூடாது. இறைவன் திருமேனி முல்லைமணம் வீசுவது; அதனால் அது முல்லைவனம் போலவே இருக்கிறது.

ஆடவர் மேனி முல்லை மணம் உடையது என்ற கருத்து வழிவழியே புலவர் உலகத்தில் இருந்து வருகிறது என்ப தனை மூன்று இடங்களில் கண்டோம். கம்பன் காட்டும்

1. சிதம்பரச் செய்யுட்கோவை, 57.

கோசல நாட்டில் ஆடவர் கலைதெரி கழகங்கள் உள்ள நந்தன வனங்கள் அவர்களின் மேனி மணத்தால் முல்லைவனம் ஆகின்றன. அரிசில் கிழார் அறிமுகப்படுத்தும் தலைவியின் தோள், அவளுடைய காதலன் தழுவியதனால் அவனுடைய மேனி மணமாகிய முல்லையின் நறுமணம் வீசுகிறது. குமர குருபரர் போற்றும் நடராசப் பெருமானுடைய திருமேனி உமாதேவியின் கண்ணாகிய மான் உலவுவதனால் மட்டு மன்றி மணத்தாலும் மலர் முல்லைப் புறவமாக விளங்கு கிறது.

ஓர் அரிய கருத்தை, இது உண்மைதான் என்று தெரிந்துகொள்ள மூன்று பெரும் புலவர்கள் சான்று கூறினால் போதாதா?

# இலக்கியக் கரும்பு

இன்று பொங்கல் திருநாள்.[1] கரும்பும் மஞ்சளும் வைத்துக் கதிரவனைப் போற்றும் திருநாள். கரும்பு இனிப்புச் சுவையின் அடையாளம்; வெல்லத்துக்குத் தாய். கற்கண்டும் சர்க்கரையும் கரும்பு இருந்தால்தான் கிடைக்கும்.

கரும்பின் நினைவே இனிக்கிறது. அன்பு உடைய வர்களை, 'கட்டிக் கரும்பே!' என்று சொல்லி, நம் ஆர்வத்தைக் காட்டுகிறோம். கட்டி என்பது கற்கண்டுக்குப் பெயர். கற்கண்டு காய்ச்சுவதற்கு உயர்ந்த வகையான கரும்பு வேண்டும். கட்டிக் கரும்பு என்பது அந்த உயர்ந்த சாதிக் கரும்பைக் குறிக்கும் சொல். பெரியாழ்வார் கண்ண பிரானை, 'ஆலை நீள்கரும் பன்னவன் தாலோ' என்று பாடுகிறார்.

நல்ல நிலத்துக்கு அடையாளம் கரும்பும் நெல்லும் விளைவது. "நிலத்துக் கணியென்ப நெல்லும் கரும்பும்" என்று பழம்புலவர் ஒருவர் பாடுகிறார். வளர்க்கும் வகை யில் கரும்பை வளர்த்து, நாவுக்கு இனிய வெல்லத்தையும் சர்க்கரையையும் கற்கண்டையும் தருகிறவர்கள் வாழட்டும். அவர்கள் முயற்சியினால்தானே இன்று பொங்கல் வைக்க முடிகிறது?

வெல்லம் இல்லாவிட்டால் சர்க்கரைப் பொங்கல் எங்கிருந்து வரும்?

*

1. பொங்கலன்று வெளியான கட்டுரை இது.

தமிழ் நாட்டில் பல இடங்களில் கரும்பு வளம் பெற்று வளர்கிறது. கரும்பாலைகள் பல இந் நாட்டில் இருக் கின்றன. வயலில் உழவர்களின் முயற்சியினால் விளையும் கரும்பு அது. சொல்லேருழவராகிய புலவர்கள் தாம் இயற்றிய செய்யுட்களில், இலக்கியமாகிய வயல்களில், கரும்பை அங்கங்கே நட்டிருக்கிறார்கள். சொல்லுருவில் அந்தக் கரும்பு பலபல வகையில் காட்சி தருகிறது.

செய்யுட்களில் கரும்பைப் போன்ற கவிதை ஒரு வகை. அதை இட்சுபாகம் என்பார்கள். ஆலையில் கொடுத்துச் சக்கை வேறு சாறு வேறாகப் பிழிந்து பயன் படுத்துவது போல அத்தகைய கவிகளை ஆராய்ந்து கோது நீக்கிக் குணம்கொள்ள வேண்டுமாம். இலக்கியக் கரும்பு களை இனிப் பார்க்கலாம்.

★

கரும்பு என்றவுடனே ஆலையும் உடன் நினைவுக்கு வருகிறது. இரும்பு உருளைகள் மூன்று இணைந்து, தமக் குள்ளே போகும் கரும்பைச் சக்கை வேறு சாறு வேறு ஆக்குகின்றன. கட்டுக் கட்டாகக் கரும்பைச் சாறு பிழியும் வேலையில் ஆலை ஈடுபட்டிருந்தாலும் அந்த இரும்பு உருளை களுக்குக் கரும்பின் சுவை எள்ளளவாவது தெரியுமா? இரும்பிலே கரும்பின் சுவை ஏறாது; இதுதான் இயற்கை.

கரும்பாலையில் உள்ள இரும்பு உருளைக்குக் கரும்பின் சுவை தெரியும் நிலை ஏற்பட்டால் அதைக் காட்டிலும் பெரிய ஆச்சரியம் இருக்க முடியாது. அந்த ஆச்சரியம் ஓரிடத்தில் நிகழ்ந்தது. நம்பிக்கையுள்ள ஒரு பெரியவரே இதைச் சொல்கிறார்.

மனிதனால் செய்ய இயலாத அற்புதமான செயலை இறைவன்தான் செய்யமுடியும். இரும்பு கரும்பின் சுவையை உணரும்படி செய்த இந்தச் செயலும் இறைவன் அருளால்

நிகழ்ந்தது என்று சொல்லுகிறார் மாணிக்க வாசகர். எங்கோ எப்பொழுதோ நிகழ்ந்தது அன்று இது. அவர் சொந்த அநுபவத்திலே உணர்ந்தது. வேறு சாட்சி வேண்டுமா?

தம்முடைய மனமாகிய இரும்பிலே இறைவன் தன் திருவடியாகிய கரும்பின் சுவையைக் காட்டினான் என்று பாடுகிறார். "இரும்பின் தன்மையைத் தரும் மனத்தை யுடைய என்னை இழுத்து இழுத்து, என் எலும்பு உருகும் படியாகச் செய்து, கரும்பு தருகின்ற சுவையைக் காட்டி யதுபோல் உன் பொன்னடிகளைக் காட்டினையே!" என்று போற்றுகிறார்.

> இரும்புதரு மனத்தேனை
> ஈர்த்தீர்த்துஎன் என்புஉருக்கி
> கரும்புதரு சுவைஎனக்குக்
> காட்டினைஉன் பொன்னடிகள்.[1]

★

ஒரு ஞானி. அவர் சிறு பிராயத்திலிருந்தே இறைவனை வழிபடுகிறவர். ஆசையை அடக்கி யோகம் பயில்பவர். இந்தப் பிறவி எடுத்ததன் பயன் எதுவோ அதைப் பெற்று விட்டவர். அவருக்கு மரணத்தைப் பற்றிச் சிறிதும் கவலையே இல்லை.

அடுத்த வீட்டில் ஒருவன் இருக்கிறான்; முதிர்ந்த வயசு. வியாதியாகப் படுத்துக் கிடக்கிறான். 'பலகாலமாக வாழ்க் கையில் இன்பம் அநுபவித்தோமே, இதுபோதும்' என்று அவன் நினைக்கவில்லை. 'இன்னும் வாழவேண்டும்; வாழ்க் கையை அநுபவிக்க வேண்டும்' என்ற ஆசை பெருகிக் கொண்டே இருக்கிறது. அதனால் சாவைக் கண்டு அவன் பயப்படுகிறான்.

---

1. திருவாசகம், திருவேசறவு, 1.

இந்த இரண்டு பேருக்கும் உபமானமாகக் கரும்பு வருகிறது.

ஒருவன் கரும்புத் தோட்டம் போட்டான். கரும்பு நன்ருக முற்றி விளைந்தது. அதை வெட்டி ஆலையிட்டு வெல்லமாக்கிவிட்டான். கரும்புத் தோட்டத்தில் சோகையும் சக்கையும் குவிந்து கிடந்தன. அவற்றிற்கு யாரோ ஒரு போக்கிரி தீ வைத்துவிட்டான். அதைக் கண்ட ஒருவர் ஓடிவந்து தோட்டத்துக்குச் சொந்தக்காரரிடம், "ஐயா, உங்கள் கருப்பங்காடு எரிகிறது" என்று சொன்ஞர். அவர் என்ன சொன்ஞர் தெரியுமா? "நானே தீவைக்க வேண்டும் என்று எண்ணினேன். அந்தப் புண்ணியத்தை யாரோ உபகாரி கட்டிக் கொண்டான். அவன் வாழட்டும். ஆலையாட்டி வெல்லம் எடுத்த பிறகு கருப்பங்காடு எரிந்தால் என்ன? எரியாமல் இருந்தால் என்ன?" என்ருர்.

இன்னும் ஆலையிடாமல், கரும்பை வெட்டாமல் இருந்த மற்ருெருவன் வயலில் ஒருவன் தீ வைத்துவிட்டான். அப்போது, "ஐயோ! பட்ட பாடெல்லாம் வீணுகிப் போய்விட்டதே!" என்று நிலத்துச் சொந்தக்காரன் அலறிஞன்.

இந்த இரண்டு பேரில் கரும்பை ஆலைபோட்டு ஆட்டிக் கொண்டவனைப் போன்றவன் ஞானி; மற்ருெருவனுக்குச் சமமானவன் அஞ்ஞானி.

'கரும்பினுல் கட்டி கொண்டவர் அதன் துரும்பாகிய தோகை வேகும்பொழுது துயரடைய மாட்டார். அது போல முயற்சி செய்து இவ்வுடம்பினுல் உண்டாகும் நல்ல பயனைப் பெற்றவர் யமன் வரும்பொழுது வருந்தமாட்டார்கள்' என்று நாலடியார் சொல்கிறது.

கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்கால் துயர்ஆண்டு உழவார்;
வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர்.[1]

---

1. நாலடியார், 35.

[கட்டி - கற்கண்டு; சிறுகாலை - தக்க பருவத்தில்; துரும்பு - சேத்தை; வருந்தி - முயற்சி செய்து; கூற்றம் - யமன்; பரிவது - இரங்குவது.]

★

கரும்பின் நுனியில் இருக்கும் தாழையைத் தோகை என்று சொல்வார்கள்: அதைக் கொழுந்தாடையென்று உலக வழக்கில் வழங்குவார்கள். கரும்பின் நுனிப்பகுதி சுவையற்றது; அடிப்பகுதி மிக்க சுவையுள்ளது.

'அஜகஜாந்தரம்' என்று ஒரு பழமொழியை நாம் பல முறை கேட்டிருக்கிறோம். உயர்வும் தாழ்வும் உள்ள இரண்டு பொருள்களினிடையே உள்ள வேற்றுமையைக் குறிக்க இந்தப் பழமொழி வழங்குகிறது. அஜம் என்பது ஆடு; கஜம் என்பது யானை. ஆட்டுக்கும் ஆனைக்கும் உள்ள வேறு பாடு என்பது அதன் பொருள். மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு என்று சொல்வதில்லையா? அது போன்றது இது. 'ஆடு சிறிய உருவமுடையது. ஆனை பெரிய உருவம் உடையது. உருவத்தில் உள்ள வேற்றுமையைக் கருதிச் சொல்வது இது' என்று தோன்றும். அதைவிட நுட்பமான கருத்து ஒன்று இருக்கிறது; கரும்போடு தொடர்புடையது அது.

தோகையோடு உள்ள கட்டுக் கரும்பை ஓரிடத்தில் போட்டிருக்கிறார்கள். அங்கே ஒரே சமயத்தில் ஓர் ஆடும் ஓர் ஆனையும் வருகின்றன. ஆடு நேரே தோகையுள்ள பக்கத்துக்குப் போய்க் கொழுந்தாடையைக் கடிக்கும். ஆனையோ கரும்பின் அடிப் பக்கம் சென்று கரும்பைக் கடிக்கும். சுவை காணும் திறத்தில் இப்படி ஆட்டைப் போன்ற மனிதர்களும் ஆனையைப் போன்ற மனிதர்களும் உலகத்தில் இருக்கிறார்கள் அல்லவா? அவர்களிடையே உள்ள வேற்றுமை 'அஜகஜாந்தரம்'.

★

கரும்பை ஒருவன் நுனியிலிருந்து கடித்துக்கொண்டு வருகிறான். வரவர இனிமை மிகுதியாக இருக்கும். ஆனால்

அடியிலிருந்து தின்று வந்தானுனல் முதலில் மிக இனிக்கும்; வரவர அந்த இனிமை குறையும்; கடைசியில் சுவையே இன்றிச் சப்பிட்டுவிடும்.

கரும்பைக் கடித்துச் சுவைப்பதில் இப்படி இருவேறு வகை இருப்பதை ஒரு புலவர் நினைந்தார். நல்லவர்களோடு பழகினல் வரவர அவர்களுடைய நட்பு மேலும்மேலும் இனிமையைத் தருவதும், அல்லாதவர்களுடைய நட்பு வர வர நலம் குறைந்து அருவருப்பில் வந்து முடிவதும் அவ ருக்கு உடனே நினைவுக்கு வந்தன. இரண்டையும் உவமை யாக்கி ஒரு பாட்டுப் பாடிவிட்டார்.

> கனைகடல் தண்சேர்ப்ப! கற்றறிந்தார் கேண்மை
> நுனியிற் கரும்புதின் றற்றே;—நுனிநீக்கித்
> தூரில்தின் றன்ன தகைத்தரோ பண்பிலா
> ஈரம் இலாளர் தொடர்பு.[1]

[ஒலிக்கின்ற கடற்கரைக்குத் தலைவனே, கற்று அறிந்தவர் களின் நட்பு, கரும்பை நுனியிலிருந்து தின்றாற் போன்றது; நுனியை விட்டு அடிப் பகுதியிலிருந்து தின்றாற் போன்ற தன்மையை உடை யது, குணமும் அன்பும் இல்லாதவர்களுடைய நட்பு.]

★

கரும்பிலே நமக்கு வேண்டாதது கணு. அதைப் பற்றி ஒரு புலவர் பாடுகிருர். அவர் வேலையர் என்னும் பெயருடையவர். சிவப்பிரகாச சுவாமிகள் என்ற பெருங் கவிஞருடைய தம்பி அவர். அவருக்குக் கருணைப்பிரகாசர் என்ற தம்பி ஒருவர் இருந்தார். மூவருமே புலவர்கள்; நூல்களை இயற்றியிருக்கிருர்கள்.

கடைசித் தம்பியாகிய கருணைப்பிரகாசர் முதலில் இறந்துபோனர். மூத்தவராகிய சிவப்பிரகாசர் பல ஆண்டு களுக்குப் பின் மறைந்தார். கடைசியில் பூத உடம்பை நீத்தவர் வேலையர். தம் முன்னவரும் பின்னவரும் இறந்த

1. நாலடியார், 138.

பிறகு தனியாக இருந்த அவருக்குத் துயரம் பெருகியது. 'மரணம் முறைப்படி வருவதாக இருந்தால் ஒன்று மேலிருந்து கீழ் வரவேண்டும்; அப்போது என் தமையனார் இறந்த பின் நான் இறக்க, பின் என் தம்பி இறக்க வேண்டும். இல்லையானால் கீழிருந்து மேலே போகவேண்டும். முதலில் என் தம்பி இறந்தான். பின்பு நான் இறந்திருக்க வேண்டும். பிறகுதான் என் தமையனார் இறக்கவேண்டும். இந்த இரண்டு முறையிலும்சேராமல் தம்பி முன் இறக்கத் தமையனார் பின்பு இறக்க நான் மொட்டை மரமாக நிற்கிறேன்' என்று அவர் அளவிலாத வருத்தம் அடைந்தார்.

'என் தம்பியும் பெரும்புலவன். அண்ணாவோ கவிதா சார்வபௌமர். அவர்கள் இருவரும் போன பிறகு நான் இருந்து என்ன பயன்? கருப்பங்கழியை வெட்டித் தின்பவர்கள் மேற்கழியையும் கீழ்க் கழியையும் வெட்டிக் கொண்டு கணுவைப் போட்டுவிடுவது போலத் தெய்வம், மதிப்புள்ள என் சகோதரர் இருவரையும் தன் திருவடியிலே சேர்த்துக்கொண்டு, என்னை மட்டும் ஒதுக்கிவிட்டது. நான் கரும்பில் உள்ள கணுவைப்போல இருக்கிறேன்!' என்று புலம்பினார். அந்த வருத்தம் பாடலாக மாறி வெளியாயிற்று.

யாரோ ஒரு பெண் அவரைப் பார்த்து, "உங்கள் அண்ணனும் தம்பியும் எங்கே?" என்று கேட்க, விடை சொல்வது போல அமைந்திருக்கிறது பாட்டு.

> **அல்லிமலர்ப் பண்ணவனும் ஆராய்ந் தறிகவிதை**
> **சொல்லும் இருவரிடைத் தோன்றியயான்—முல்லை**
> **அரும்பிற் பொலியும் அணிமுறுவல் நல்லாய்,**
> **கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்!**

[அல்லிமலர் - அக இதழ்களையுடைய தாமரை மலரில் இருக்கிற; பண்ணவன் - பிரமன்; முல்லை அரும்பைப் போல விளங்கும் அழகையுடைய பல் வரிசைகளையுடைய பெண்ணே.]

★

ஒரு சபையில் என் ஆசிரியராகிய ஐயரவர்கள் தலைமை வகித்தார்கள். அப்போது மூன்று பேர் சொற்பொழிவு ஆற்றினார்கள். அவர்களில் நடுவிலே பேசினவர் அவை யடக்கமாக, "நான் முன் பேசிய நல்ல பேச்சாளருக்கும் பின் பேசப்போகிற அறிவாளிக்கும் இடையிலே வந்து நிற்கிறேன், கரும்பிலே கணுவைப்போல்" என்றார். அவ ருக்கு வேலையர் பாடல் நினைவில் வந்திருக்கவேண்டும். அவர் நன்றாகவே பேசினார். பேச்சு முடிந்தபிறகு அவைத் தலைவராகிய ஐயரவர்கள் தம் கருத்தைச் சொல்லும்போது, கணுவென்று அவர் சொன்னதற்கு உயர்வான பொருள் ஒன்றைச் சொல்லி யாவரையும் இன்புறச் செய்தார்கள். "அன்பர் தம்மைக் கணுவென்று சொன்னார். கணு வானது தாழ்ந்ததென்ற கருத்தில் அவர் சொல்லி யிருக்கலாம். ஆனால் வேளாண்மை செய்பவர்களைக் கேட்டால் உண்மை விளங்கும்; கணுவின் பெருமை தெரிய வரும். கரும்பைக் காப்பாற்றி வளரவைப்பது கணுத்தான். கரும்புக் கரணைகளை நடும்போது முளை கிளம்புவது கணுவி லிருந்துதான். ஆகவே, கணுவும் உயர்ந்ததுதான்" என்று அவர்கள் சொன்னார்கள்.

கரும்பைப்பற்றி, இலக்கியங்களில் வரும் கரும்பைப் பற்றித்தான், இன்னும் சொல்லிக்கொண்டே போகலாம். இப்போதைக்கு இது போதுமே!

# பிரமனுக்குச் சாபம்

"இந்தப் படுபாவியால்தான் நான் இந்த அல்லலுக்கு ஆளானேன்" என்று நாம் படும் துன்பங்களுக்குப் பிறரைக் காரணமாக்கி, வெறுத்து, வைது சினத்தைக் காட்டுகிறோம். இதனால் வீணே மனிதனுக்கும் மனிதனுக்கும் இடையே கசப்பு வளர்கிறது. சமுதாய வாழ்வில் அமைதி கெடுகிறது. இதை மாற்றுவதற்காகவே, 'எல்லாம் விதியின் விளைவு' என்ற சமாதானத்தைப் பெரியவர்கள் வற்புறுத்திப் பேசுகிறார்கள். நல்லவர்கள் தாம் துன்புறும்போது, யாரையும் நொந்துகொள்ளாமல், 'எல்லாம் என் தலைவிதி!' என்று சொல்லுகிறார்கள்.

விதி யென்றும், தலை எழுத்தென்றும் சொல்லிச் சமாதானம் செய்துகொள்வதற்கு ஏற்ற வகையில் பல கற்பனைகளைப் பெரியவர்கள் செய்து வைத்திருக்கிறார்கள். 'அவன் அவன் விதிப்படியே அயன் அவன் அவன் தலையில் எழுதுகிறான்' என்றார்கள். உலகத்தைப் படைக்கும் கடவுள் பிரமன் என்றும், அவன் ஒவ்வோர் உயிரையும் படைத்துவிடும்போது, அதன் அதன் புண்ணிய பாவங்களுக்கு ஏற்றபடி இன்ப துன்பங்களை வரையறுத்துத் தலையில் எழுதிவிடுகிறான் என்றும் புராணங்கள் கூறுகின்றன.

தாம் துன்பப்படும்போது தம் தலைவிதியை நோவாமல் அயலாரை நோவதுபோல, 'எல்லாம் அந்தப் பிரமன் எழுதியது!' என்று கூறுவது அறிவுடையவர்களுக்கு வழக்கம். புலவர்கள் அவ்வாறு பிரமனுக்குச் சாபம் கொடுப்பதுண்டு.

★

நப்பாலத்தனார் என்ற புலவர் காதற் பாட்டு ஒன்று பாடியிருக்கிறார். ஒரு காதலன் தன் காதலியோடு இன்

புற்று வாழும்போது தன் கடமைகளை ஆற்றுவதற்குப் போதிய பொருள் இல்லையென்று உணருகிருன். அதை ஈட்டிக்கொண்டு வராவிட்டால் இல்லற வாழ்க்கையை நடத்த இயலாது. அறம் செய்வதற்கும் இன்பவாழ்வு வாழ்வதற்கும் பொருள் இன்றியமையாதது. பொருளைத் தேட வேண்டுமானுல் அவன் வெளியூர் சென்று முயற்சி செய்ய வேண்டும். சில காலம் தங்கித் தொழிலோ வியாபாரமோ செய்தால்தான் பொருள் கிடைக்கும்.

ஒரு கணமும் காதலியைப் பிரியாது வாழ்கிற அவனுக்கு, அவளைப் பிரியவேண்டுமே என்ற நினைவு துன்பத்தை உண்டாக்குகின்றது. அறம் செய்ய வேண்டுமானுல் ஆடவன் முயற்சி செய்து பொருள் ஈட்டவேண்டும். இல்லையானுல் உலகம் அவனைப் பழிக்கும். இந்த உண்மையையும் அவன் மறக்கவில்லை. தன் காதலியோடு முயங்கி இன்புறும் நிலை ஒருபாலும், பொருள் தேடுவதற்காக மேற்கொள்ளும் பிரிவு ஒருபாலும் இருந்து, அவன் சிந்தையைச் சிதறச் செய்கின்றன. மனம் ஊசலாடுகிறது. 'இன்பமா? கடமையா?' என்ற கேள்வி அவன் அகக்கண்முன் நின்று பயமுறுத்துகிறது. இறுதியில் கடமையைச் செய்யத் துணிந்துவிடுகிருன். ஆனுலும், தான் இடையீடு இல்லாமல் நுகரும் இன்ப வாழ்வுக்கு இடையே இந்தப் பிரிவு நேரப்போவது அவனுக்கு மயக்கத்தை உண்டாக்குகிறது.

"ஏன் இப்படித் தடுமாறுகிருய்" என்று அவன் மனம் கேட்கிறது.

"தடுமாற்றமா? நான் மலைபோலத் திடமாக இருக்கிறேனே!" என்று அவன் அறிவு பேசுகிறது.

"இந்தப் பயணத்தால் காதலியோடு ஒன்றி வாழும் வாழ்வு தடைப்படுமே. பாலை நிலத்தைக் கடந்து செல்ல

நேருமே! அது எவ்வளவு கடுமையான வழி தெரியுமா?"—இப்படி ஒரு சிந்தனை.

"ஓ, நன்ருகத் தெரியும். எங்கே பார்த்தாலும் சுடுகிற சரளைக் கற்கள். இடையே ஆயர்கள் தோண்டிய சிறிய பள்ளத்தில் தேங்கிய நீரை யானைகள் குடிக்கும்; அவ்வளவு ஈரமற்ற நிலம். அது என் இன்ப வாழ்வுக்கு இடையே வரும் தன்மையுடையதாக இருந்தாலும் நான் சென்று வரத் தீர்மானித்துவிட்டேன். திண்ணிய மலை போல இருக்கிறேன்" என்று சமாதானம் செய்துகொள்கிருன். ஆனாலும், உள்ளே பிரிவுத் துன்பம் பயமுறுத்துகிறது; சற்றே பொருமுகிருன்; பெருமூச்சு விடுகிருன். 'இன்ப வாழ்விற்குப் பொருள் தேடும் முயற்சி பகையாக இருக்கிறதே!' என்று எண்ணுகிருன். இந்த உலகத்தின் அமைப்பே அவனுக்குத் தொல்லையாகத் தோன்றுகிறது. 'என்னடா உலகம்!' என்று எண்ணுகிருன். அப்பால், 'இப்படியெல்லாம் உலகத்தை அமைத்தானே, அவனையல்லவா சொல்லவேண்டும்?' என்ற நினைப்புத் தோன்றுகிறது. மனத்துக்குள் ஆத்திரம். பேச்சோ சாந்தமாகப் பேசுவதுபோல வருகிறது. "இப்படியெல்லாம் நடக்கும்படி இந்த உலகத்தைப் படைத்தவன் நெடுநாள் சுகமாக வாழட்டும்! அவன் ஆட்சி நடக்கட்டும்" என்று வாழ்த்துகிருன். வாழ்த்தா இது? வயிற்றெரிச்சலின் வேறு வடிவம்!

ஐதே கம்மஇவ் வுலகுபடைத் தோனே!
வைஎர் வால்எயிற்று ஒண்ணுதற் குறுமகள்
கைகவர் முயக்கம் மெய்யுறத் திருகி
ஏங்குயிர்ப் பட்ட வீங்குமுலை யாகத்
துயில்இடைப் படூஉம் தன்மைய தாயினும்
வெயில்வெய் துற்ற பரல்அவல் ஒதுக்கிற்

கணிச்சியிற் குழித்த கூவல் நண்ணி
ஆன்வழிப் படுநர் தோண்டிய பத்தல்
யானை இனநிரை வௌவும்
கானம், திண்ணிய மலைபோன் றிசினே.[1]

[இந்த உலகத்தைப் படைத்தவன் நன்றாக வாழட்டும்! வெயிலினால் வெப்பம் அடைந்த சிறு கற்களை உடைய பள்ளங்களினிடையே நடக்கும்போது, இடையிடையே குந்தாலியால் முன்பே குழித்திருந்த கிணறுகளில் மீண்டும் பசுக்களை ஓட்டிச் செல்வார் தோண்டிய பள்ளங்களில், அவ்வழியே சென்று ஓய்ந்த யானைக் கூட்டம் நீரைப் பெறும் பாலை நிலமானது, கூர்மையும் அழகும் வெண்மையும் பெற்ற பல்லும் விளக்கமான நுதலும் உடைய சிறிய பெண்ணாகிய என் காதலி கைகளால் அணைக்கும் அணைப்பை உடம்பிலே பொருந்தாமல் மாற்றிவிட்டு, ஏங்குகின்ற பெருமூச்சுத் துன்புறுத்துவதனாலே விம்மும் மார்பையுடைய இவளுடன் துயிலும் துயிலினிடையே தடையை உண்டாக்கும் தன்மையை உடையதானாலும், நான் இதன் பொருட்டுத் தளராமல் திண்மையான மலை போல் இருக்கிறேன்.]

பாவம்! அவன் மலையைப்போலத் திண்ணியனாக இருக்கிறேன் என்று சொல்லும்போதே, "பிரமா வாழட்டும்!" என்று, அவன் உள்ளத்தே உள்ள பொருமல் குறிப்பாக வெளியாகிறது.

★

தனக்கு நேர்ந்த துன்பத்தினால் வாடிப் பிரமனை வாழ்த்துவதுபோல வைகிறான் இந்தத் தலைவன். தாயுமானவரும் அப்படிச் செய்கிறார். அவர் உயர்ந்த பண்புடையவர்; கடுமையாக வையத் தெரியாதவர். ஆனாலும், பிரமனைக் குறை கூறுகிறார்.

"கடவுளே, என்னுடைய மனம் உன்னை நினைந்து உருகினால் உன் அருளைப் பெறலாம் என்று எண்ணு

1. நற்றிணை, 240.

கிறேன். உருகும் அடியார்களுக்கு உறுதுணையாக நிற்கிறவன் நீ என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அது தெரிந்தும் என் மனம் உருகாமல் கல்லைப்போல இருக்கிறதே! கல்கூட இசைக்கு உருகுமென்று சொல்கிறார்கள். அதைவிட இழிந்ததாக இருக்கிறதே என் மனம்!" என்று அவர் முறையிடுகிறார்.

கல்லேனும் ஐயஒரு காலத்தில்
உருகும்என் கல்நெஞ்சம் உருகவிலையே!

'ஏன் இந்த நெஞ்சம் உருகவில்லை? மனத்துக்கு இத்தனை வன்மை உண்டானது எப்படி? என்னைப் படைத்தவன்தானே இந்த மனத்தைப் படைத்து, இதற்கு இந்த வன்மையையும் படைத்திருக்கிறான்? அவனைப் பிரமன் என்றும் மூன்று கடவுளரில் ஒருவன் என்றும் சொல்கிறார்கள். கடவுளானால் நல்ல காரியம் அல்லவா செய்ய வேண்டும்? இத்தகைய வன்மையைக் கற்பித்த அவனைக் கடவுள் என்று சொல்லலாமா?' என்று அவர் எண்ணங்கள் விரிகின்றன.

கல்லேனும் ஐயஒரு காலத்தில்
உருகும்என் கல்நெஞ்சம் உருகவிலையே!
கருணைக்கு இணங்காத வன்மையையும்
நான்முகன் கற்பிக்க ஒருகடவுளோ?

என்று பாடுகிறார். யார் மீதாவது நமக்குக் கோபம் வந்தால், "அவனும் ஒரு மனிதனா?" என்று சொல்கிறோம்; அந்த வகையில்தான் தாயுமானவர், "அந்த நான்முகனும் ஒரு கடவுளோ?" என்று கேட்கிறார்.

★

பிறருடைய துன்பத்தைக் காணும்போது மனம் இரங்கும் அருளுடையாரும் இப்படிப் பிரமனை வைதிருப்பதை இலக்கியங்களில் காணுகிறோம்.

பக்குடுக்கை நன்கணியார் என்பவர் ஒரு புலவர். அவர் ஓர் ஊருக்குப் போனார். ஒரு தெருவில் சாப்பறை கொட்டிக் கொண்டிருந்தது. அங்கே ஒரு வீட்டில் ஓர் ஆடவன் இறந்துவிட்டான். அதனால் ஒரு பெண் மங்கலம் இழந்தாள். அந்த வீட்டில் ஒரே துயரம். அந்த வழியாகப் போன புலவர் சற்றே நின்று விசாரித்தார். செய்தியைச் சொன்னவர் சொல்லும்போதே கண்ணைத் துடைத்துக் கொண்டார். வீட்டுக்குள்ளே கண்ணீராறு ஓடியது. புலவர் அங்கிருந்து அடுத்த தெருவுக்குப் போனார். அங்கே கொட்டு மேளம் முழங்கியது. ஏதோ ஒரு வீட்டில் கல்யாணம். ஒரு கட்டிளங் காளை மங்கை யொருத்தியைக் கைப்பிடிக்கும் இன்ப விழா நடைபெற்றது. எங்கும் ஒரே மகிழ்ச்சி ஆரவாரம். எல்லோருடைய முகங்களிலும் பொலிவு, கண்களில் ஒளி. இந்தக் காட்சியையும் அவர் கண்டார்.

இழவு நிகழ்ச்சியும் விழவு நிகழ்ச்சியும் ஒரே ஊரில் வெவ்வேறு வீட்டில் நடந்தன. ஒன்றில் சாப்பறை; மற்றொன்றில் சுகமான மத்தள சத்தம். ஒன்றில் கண்ணும் கண்ணீருமாகப் பெண்மணி நின்றாள்; ஒன்றில் தலை நிறையப் பூவும், கழுத்து நிறைய மாலையும் தாங்கி நின்றாள், ஒரு மங்கை. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தார். பின்னாலே கண்ட காட்சியிலே இன்பம்; முன்னாலே கண்டதில் துன்பம். இன்பம் முந்தி நின்றாலும் துன்பம் எப்படியும் வரத்தான் போகிறது. 'இப்படி ஒரே ஊரில் ஓரிடத்தில் மகிழ்ச்சியும், மற்றோரிடத்தில் துயரமும் உண்டாகும்படி படைத்தானே அவன் பண்பிலி' என்று புலவருக்குத் தோன்றியது. 'அப்பா! இந்த உலகம் முடிவில் துன்பத்தைத் தருவதுதான். இதன் இயல்பை உணர்ந்த அறிஞர்கள் எப்போதும் இன்பத்தைத் தரும் இனிய செய்கைகளைச் செய்யட்டும்' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டார்.

ஓர்இல் நெய்தல் கறங்க, ஓர்இல்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்
புணர்ந்தோர் பூஅணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பனிவார்பு உறைப்பப்
படைத்தோன் மன்றஅப் பண்பி லாளன்!
இன்னாது அம்மஇவ் வுலகம்!
இனிய காண்கஇதன் இயல்புணர்ந் தோரே.[1]

[ஒரு வீட்டில் இழவுப்பறை கொட்ட, மற்றொரு வீட்டில் குளிர்ந்த முழவின் ஓசை முழங்க, ஒரு வீட்டில் கணவனோடு சேர்ந்தவர்கள் பூவினால் அழகுபடுத்திக்கொள்ள, கணவனைப் பிரிந்தோர் துன்பத்தையுடைய மையுண்ட கண்கள் நீர்த் துளியை ஒழுகவிட, இப்படி அமையும்படி படைத்து விட்டான், நிச்சயமாகக் குணமில்லாத அந்தப் பிரமன். இந்த உலகம் துன்பமயமானது. இதன் இயல்பை உணர்ந்த அறிஞர்கள் இனிமை பெறுவதற்குரிய காரியங்களைச் செய்வார்களாக!]

புலவருக்கு நான்முகன் பால் ஆத்திரம்; அவனைப் பண் பிலாளன் என்று வைகிறார்.

★

திருவள்ளுவரிடங்கூட வசவு கேட்ட பெருமை அந்த நான்முகனுக்கு உண்டு. பணக்காரர்களும் ஏழைகளும் கலந்து வாழ்வது உலகம். சிலர் பிச்சை எடுத்து வாழ்கிறார்கள். தொழில் செய்து பிழைக்கலாம். கைகால்கள் நன்றாக இருந்தும் பிச்சை எடுத்து வாழ்கிறார்கள். ஏன் அவர்கள் அப்படி வாழவேண்டும்? "இது உலக நியதி" என்று ஒருவன் சொன்னான். "பிரமன் விதித்த விதி" என்று மற்றொருவன் சொன்னான்.

இதைக் கேட்டார் திருவள்ளுவர். "என்ன? பிறரிடம் பிச்சை வாங்கி, உயிர் வாழும்படியாக உலகத்தைப் படைத்தவன் செய்கிறான் என்றா சொல்கிறாய்? அப்படியானால் அந்தப் பிரமன் நாசமாகப் போகட்டும். இந்த

1. புறநானூறு, 194.

ஏழைகளைப் போலவே அவனும் ஊரெல்லாம் திரிந்து கெடட்டும்" என்று கோபத்தோடு சாபம் இட்டார். 'இன்மை என ஒரு பாவி' என்று வறுமையைக் கண்டால் குமுறும் உள்ளம் படைத்தவர் அல்லவா அவர்?

> இரந்தும் உயிர்வாழ வேண்டின், பரந்து
> கெடுக உலகியற்றி யான்.[1]

★

ஔவைப் பாட்டி ஒரு வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். உலகமெல்லாம் போற்றும் அந்தப் பெருமாட்டியைக் கண்டு எழுந்து புன்னகை பூத்து வரவேற்றாள் அந்த வீட்டில் இருந்த பெண்மணி. பாட்டிக்கு வேண்டிய உணவு கொடுக்க எண்ணினாள் அவள். ஆனால் எண்ணியபடி செய்ய வகையின்றி மிரள மிரள விழித்தாள். மானைப் போல மருண்டாள். அந்த வீட்டில் உரிமையில்லாதவளைப் போலத் தோன்றினாள்.

"ஏன் அம்மா, இந்த வீட்டில் இருப்பவள்தானே நீ?" என்று பாட்டி கேட்டாள்.

"ஆம்" என்றாள் அந்த நங்கை.

"உன் கணவன் வெளியில் போயிருக்கிறானோ?" என்றாள் பாட்டி.

"ஆம்" என்றாள் அவள்.

"சிறிது வீட்டுக்குள்ளே வந்து குந்தலாமா?" என்று ஔவை கேட்டாள்.

அந்தப் பெண்மணி மலங்க மலங்க விழித்தாள். அதற்குள் ஓர் ஆடவன் அங்கே வந்தான். அவளைச் சுடுவதுபோல விழித்துப் பார்த்தான்; "இங்கே ஏன் நிற்கிறாய், சோம்பேறி?" என்று தன் முரட்டுக் கரத்தால் பளீர் பளீர் என்று அறைந்தான். பாவம்! அந்த மானனைய

1. பரந்து - திரிந்து; உலகு இயற்றியான் - உலகத்தைப் படைத்த பிரமன்.

மடமகள் முகம் சுருங்கிக் கண்ணீர் வார உள்ளே போய் விட்டாள்.

அழகும் இளமையும் மென்மையும் கொண்ட அந்த நங்கைக்கு அந்த முரடன் கணவன் என்பதைப் பாட்டி தெரிந்துகொண்டாள். 'அவளுக்கு இந்த மிருகத்தை எப்படிக் கட்டி வைத்தார்கள்?' என்று நினைத்தாள். பிறகு, 'மனிதர் கையில் என்ன இருக்கிறது? பாவம்! அந்த ஏழை கள் இப்படியெல்லாம் நடக்கப் போகிறதென்று கண்டார் களா? எல்லாம் பிரமன் எழுதிய எழுத்து. இவளுக்கு இவன் என்று அவன் அல்லவா முடி போட்டிருக்கிறான்?' என்ற எண்ணம் வந்ததோ இல்லையோ, பாட்டிக்கு அந்தப் பிரமன் மேலே கோபம் வந்துவிட்டது. "மான் போன்ற இந்த மெல்லியலுக்கு ஈரமில்லாத கட்டை போன்ற இவனைக் கணவனாக விதித்தானே; அந்தப் பிரமனை நான் கண்டால் என்ன செய்வேன் தெரியுமா? முன்பு அவனுக்கு ஐந்து தலை இருந்தனவென்றும், அகங்காரங்கொண்டு நின்ற தால் அந்த ஐந்தில் ஒன்றைச் சிவபெருமான் கொய்தான் என்றும், அதுமுதல் அவன் நான்முகன் ஆனான் என்றும் சொல்லுகிறார்கள். இப்போது நான் அவனைக் கண்டால் எஞ்சியிருக்கும் நான்கு தலைகளையும் ஒரேயடியாகக் கிள்ளி விட மாட்டேனா?" என்று பாட்டுப் பாடினாள் பாட்டி.

> அற்றதலை போக அறாததலை நான்கினையும்
> பற்றித் திருகிப் பறியேனோ?—வற்றல்
> மரம்அனையா னுக்கிந்த மானைவகுத் திட்ட
> பிரமனையான் காணப் பெறின்.

"பற்றித் திருகிப் பறியேனோ?" என்ற அடியைப் படிக்கும்போது பாட்டி பல்லைக் கடித்துக்கொண்டுதான் அதைச் சொல்லியிருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

பாவம்! பிரமனை நினைத்தால் இரக்கந்தான் உண்டாகிறது.

# உலக அரங்கு

எந்த நாடகம் ஆடினாலும் தலைமைப் பாத்திரமாக வந்து நடித்துப் புகழ் பெறுகிற ஆற்றலுடைய கலைஞர்களை நாம் பார்த்திருக்கிறோம். அரசனைத் தலைமையாக உடைய கதை ஒன்று நாடகமாக நடிக்கப்பெறுகிறது. அப்போது அத்தகைய கலைஞர் அரசனுக்குரிய முடியோடும் அணியோடும் சிங்காதனத்தில் வீற்றிருந்து மிடுக்காகப் பேசுவார். நடை, உடை, பாவனைகளில் அரசனுக்குரிய பெருமிதம் விளங்கும். வேறு ஒரு நாடகத்தில் திருடன் தலைமைப் பாத்திரமாக இருக்கிறான். அதில் அந்தக் கலைஞர் திருடனுடைய கோலத்தைப் புனைந்து கொள்கிறார். அரச விழி விழித்த அந்தக் கலைஞரே இப்போது திருட்டு விழி விழிக்கிறார்; பேச்சும் நடிப்பும் திருடனைப் போலவே இருக்கின்றன.

அடுத்தபடி துறவியைப் பற்றிய கதையில் அந்தக் கலைஞர் அதே கோலம் பூணுகிறார். அரசனாகவும் திருடனாகவும் ஆட்சிபுரிந்தும் திருடியும் தம் கோலத்துக்கு ஏற்ப நடித்த அவர் இப்போது பற்றற்ற துறவியாக, எளிமையே உருவாக நிற்கிறார். ஆசையை அறவே துறந்து எப்போதும் ஞானத்தையே பேசுகிறார். அரசனுக்கும் திருடனுக்குமாவது உடைமையை விரிவாக்கும் ஆசை பொதுவாக இருக்கிறது. துறவிக்கும் திருடனுக்கும் பொதுமை யாதும் இல்லை. ஆயினும் திருடனாக உருக்காட்டி உரையாடிய அவரே துறவியாகவும் கோலம் கொண்டு உரையாடுகிறார்.

இத்தகைய பெருங்கலையாற்றலை அறிந்த மக்கள் அக்கலைஞரைப் பாராட்டுகிறார்கள்; ஒவ்வொரு நாளும் வெவ்

வேறு கோலம் புனைந்து அந்த அந்தக் கோலத்துக்கு ஏற்பத் திறம்பட நடிக்கும் இயல்பைப் புகழ்கிறார்கள். நுட்ப மாகக் காண இயலாதவர்கள், ஒருவரே இத்தனை வகையான கோலமும் புனைகிறார் என்று தெரிந்துகொள்வதில்லை. ஆனால் கலை நுட்பம் தெரிந்தவர்களுக்கு உண்மை தெரியும்.

கூத்தில் மாறி மாறிக் கோலம் புனைந்து நடிக்கும் திறமை கலைஞர்பால் இருக்கிறது. அது அவர் பலகால மாகப் பயின்று பெற்ற திறமை. ஒவ்வொரு மனிதனும் ஒரு வகையில் இத்தகைய ஆற்றலைப் பெற்றிருக்கிறான். நாடகக் கலைஞனைவிடத் திறம்பட நடிக்கிறான். நடிப்பதாகக் கூடக் கருதாமல் தான் மேற்கொண்ட பாத்திரமாகவே ஒன்றிப்போய் வாழ்கிறான்!

இது முதலில் வியப்பாகத் தோன்றலாம். உண்மையை உணரும்போது அந்த வியப்பு மறையும். நாடகக் கலைஞன் இயற்கையாக ஒரு பெயரும் வாழ்க்கை முறையையும் உடையவன். ஆனால் அவன் கொள்ளும் கோலமோ வெவ் வேறாக மாறுகிறது. சில சமயங்களில் அவன் இயல்புக்கு நேர் மாறாகக்கூட இருக்கலாம். நல்ல கெட்டிக்காரத் திருடனாகவும் கொலையாளியாகவும் நடிப்பவர், வாழ்க்கை யில் அப்படி இருப்பார் என்று சொல்ல முடியாது. மணந்து மக்களைப் பெற்று வாழ்வில் ஈடுபட்டவர் மேடை யில் பிரமசாரியாக இருந்தே துறந்த ஞானியாகக் கோலம் கொள்ளலாம். ஆயினும் அவருடைய இயற்கையான பண்பும் நிலையும் எப்போதும் ஒரே நிலையில் இருக்கும்.

மனிதன் எவ்வாறு நாடகம் ஆடுகிறான் என்பதைப் பார்க்கலாம். கோலம் புனையும் கலைஞர் கூத்து முடிந்த வுடன் தாம் மேற்கொண்ட ஆடையணிகளைக் கழற்றி விடு கிறார்கள். தமக்கே இயல்பான ஆடையை அணிகிறார்கள். மனிதன் என்று நாம் சுட்டும் பொருள் உடம்போடு கூடிய உயிராகும். மனிதன், விலங்கு என்று வேறு வேறு உருவத்

திலே தோன்றுவன உடம்புகளே யன்றி, உயிர் அல்ல. நாடகக் கலைஞன் உடையையும் அணியையும் புனைந்து கொள்வதுபோல, உயிர் உடம்பாகிய உடையைப் பெற்று வாழ்கிறது. அந்த உடம்புக்கு ஏற்பப் பெயர், வாழ்க்கை முறை முதலியவை அமைகின்றன.

நடிகன் ஒரு நாள் கூத்துக்கு ஒரு கோலமாக ஆடையணிகளை மாற்றுகிறான். உயிரோ ஒவ்வொரு பிறவியிலும் வெவ்வேறு உடம்பை எடுத்துக்கொண்டு வாழ்க்கையில் புகுகிறது. நடிகனுடைய நடிப்புக்கு நிலைக்களமாக நாடக அரங்கு இருப்பது போல, உயிர்கள் உடம்பை எடுத்து வாழும் வாழ்க்கைக் கூத்துக்கு அரங்காக இந்த உலகம் அமைந்திருக்கிறது. உடம்பெடுத்த மனிதர்கள் இந்த வாழ்விலே ஒன்றிப்போய் வாழ்கிறார்கள்.

உடம்பாகிய வேடம் புனைவது உயிர். அதுவே கூத்தனுடைய நிலையில் இருக்கிறது. அதனால் அதனைக் கூத்தனென்றே ஒரு புலவர் சொல்கிறார்.

> தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டும்
> கூத்தன்[1]

என்பது நாலடியாரில் வரும் பாட்டு.

வாழ்க்கையே ஒரு நாடகம், உலகமே ஒரு பேரரங்கு என்பதை ஆங்கில நாடகப் பெருங் கவிஞராகிய ஷேக்ஸ்பியர் அழகாகச் சொல்லியிருக்கிறார். குழந்தை முதல் கிழவன்வரை வெவ்வேறு பருவங்களில் உடலின் தோற்றம் மாறிப் போவதை வெவ்வேறு கோலமாக அவர் எடுத்துக் காட்டுகிறார். ஒரு பிறவியிலே தோற்றும் மாற்றங்களையே வெவ்வேறு கோலமாக அவர் கூறினார். நம் நாட்டுக் கவிஞர் ஓர் உயிரே வெவ்வேறு பிறவியில் வெவ்வேறு உருவமும் பெயரும் எடுத்து வாழ்வதை வெவ்வேறு நாடகப்

---

1. நாலடியார், 26.

பாத்திரக் கோலமாகப் புனைந்து கூறினர். அவற்றை இனிப் பார்க்கலாம்.

*

சோழன் நலங்கிள்ளி என்பவன் ஒரு பேரரசன். அவனை இளம்பருவமுதல் உடனிருந்து அறிவுரை பகர்ந்து பாதுகாத்து வந்தவர் உறையூர் முதுகண்ணன் சாத்தனுர் என்ற புலவர். அவர் அவனுடைய பெருமையைப் பல பாடல்களில் எடுத்துச் சொல்லியிருக்கிருர்.

போர் செய்து பகைவர் பொருளைக் கவர்ந்து பெருமிதத்தோடு இருந்தான் அரசன். அவனுக்கு உதவி புரிந்த வீரர்களுக்கும் பிறருக்கும் பெற்ற பொருளைப் பகிர்ந்து அளித்துப் புகழ் பெற்று அமைதியாக வாழ வேண்டும் என்று அப் புலவர் அவனுக்கு அறிவுறுத்துகிருர். 'இப் பிறவியில் எத்தனை ஈட்டினுலும் உடம்பு நழுவினுல் உடன் வாராது. இந்தப் பிறவியில் ஈட்டியவற்றை இப்பொழுதே நல்ல வகையில் பயன்படுத்தவேண்டும்' என்ற எண்ணத்தை அரசனுக்கு உண்டாக்க வேண்டும் என்பது புலவர் நோக்கம்.

'இவ்வுலகில் பிறந்து வாழ்கிறவர்கள் நாடகத்தில் ஆடும் கூத்தர்களைப் போன்றவர்கள். அவர்களுக்குரிய அரங்கே இவ்வுலகம். யாரும் எப்போதும் தம் உடம்போடு இங்கே வாழ்வதில்லை' என்று அவர் பாட்டிலே சொல்கிருர்.

........................ விழவில்
கோடியர் நீர்மை போல முறைமுறை
ஆடுநர் கழியும்இவ் வுலகத்துக் கூடிய
நகைப்புற னாகநின் சுற்றம் ;
இசைப்புற னாகநீ ஓம்பிய பொருளே ![1]

'விழாக் காலங்களில் ஆடும் கூத்தருடைய இயல்பைப் போல வெவ்வேறு வகையாக வந்து இயங்கும் மக்கள்

1. புறநானூறு, 29.

வாழ்ந்து மறையும் இவ்வுலகத்தில், வாழ்வின் நிலையா மையை உணர்ந்து, நின்னைச் சூழ்ந்துள்ள உறவினரும் நண்பினரும் மகிழ்ச்சியைப் பெறுவார்களாக; நீ அதற்கு வழி செய்வாயாக! நீ பாதுகாத்த பொருள் நின் புகழை வளர்ப்பதாகுக!' என்பது இதன் பொருள்.

'சேமித்து வைத்த செல்வத்தை ஒருவன் எப்போதும் நுகர முடியாது, வாழ்க்கை நிலையாதது ஆகையால்' என்பதை அறிவுறுத்த வந்தவர் மக்களைக் கூத்தராகவும் உலகை நாடக மேடையாகவும் அமைத்துக் காட்டுகிறார். இது புறநானூற்றில் வரும் பாட்டு.

★

வட நாட்டுக்குச் சென்று அங்கே உள்ள மன்னர்களை வென்று அவர்கள் தலையில் இமயக் கல்லை எடுப்பித்து வந்தான் சேரன் செங்குட்டுவன். அந்தச் செய்தியைச் சோழனும் பாண்டியனும் அறிந்தபோது, அவர்கள் பகைவர் தலையிற் கல் எடுப்பித்ததைப் பாராட்டவில்லை. அதனைக் கேட்ட சேரனுக்குச் சினம் மூண்டது. வடநாட்டிலே செய்த போர் போதாதென்று இங்கும் சோழன் மேலும் பாண்டியன் மேலும் போர் தொடுத்தால் என்ன செய்வது என்று அச்சங்கொண்டனர் அறிவுடை மக்கள். அப்போது அங்கிருந்த மாடலன் என்னும் மறையோன், இனி உயிருக்கு உறுதி பயக்கும் அறச் செயல்களைச் செய்ய வேண்டுமென்பதை அரசன் மனம் கொள்ளும் வகையில் அறிவுறுத்தப் புகுந்தான். அவனுடைய வீரச் செயல்களை எடுத்துக் கூறி முதலில் வாழ்த்தினான். பிறகு முன்னோர் பெருமையையும் எடுத்துச் சொல்லி, "அவர்கள் எத்தனை சிறப்புடையவர்களாயினும் உலகிலிருந்து மறைந்து போனார்கள். யாக்கை நில்லாது என்பதை நீ உணர்ந்தவன் அல்லவா? செல்வமும் நில்லாது, இளமையும் நில்லாது என்பதை உன் வாழ்க்கையிலே நீ கண்டிருக்கிறாய். நரை முதிர்ந்த யாக்

கையை நீயும் கண்டாய்" என்று அறிவுரை கூறப் புகுந்தான். பின்பு உயிரானது பலபல பிறவிகளை எடுத்து மாறி மாறி வருவதைச் சொன்னான். "தேவராக வாழ்ந்தவர்கள் மனிதராகப் பிறக்கிறார்கள். மனிதனாகப் பிறந்த உயிர் பின்பு விலங்காகப் பிறக்கினும் பிறக்கும். விலங்காகப் பிறந்தது பின்பு நரகராகப் பிறப்பதும் உண்டு. உயிர் ஒரு பிறவியோடே ஒரே உடம்போடே இருப்பது என்பது இல்லை" என்று பின்பு சொல்கிறான்.

> விண்ணோர் உருவின் எய்திய நல்லுயிர்
> மண்ணோர் உருவின் மறிக்கினும் மறிக்கும் ;
> மக்கள் யாக்கை பூண்ட மன்னுயிர்
> மிக்கோய் விலங்கின் எய்தினும் எய்தும் ;
> விலங்கின் யாக்கை விலங்கிய இன்னுயிர்
> கலங்கஞர் நரகரைக் காணினும் காணும்.

பிறகு உயிர் இவ்வாறு பல உடம்புகளை எடுத்து வாழ்வதற்கு நாடகக் கூத்தரின் வாழ்க்கையை உவமையாகக் கூறுகிறான்.

> ஆடும் கூத்தர்போல் ஆருயிர் ஒருவழிக்
> கூடிய கோலத்து ஒருங்குநின்று இயலாது ;
> செய்வினை வழித்தாய் உயிர்செலும்.

'நாடகத்தில் ஆடுகின்ற கூத்தர் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு கோலம் தாங்கி, அவ்வக்கோலத்தையே எப்போதும் கொள்ளாது மாற்றுவது போல, உயிரானது தான் எடுத்த ஒரு பிறப்பின் வழியே அதன்கண் கூடிய உருவம் முதலியவற்றோடு நிலைபெற்று நில்லாது ; அவ்வப் பிறவியில் செய்த வினையின் வழியே வெவ்வேறு பிறவியில் வெவ்வேறு கோலம் பூணச் செல்லும்' என்று அவன் அறிவுறுத்துகிறான்.

உலகமாகிய நாடக அரங்கில் உயிர் கோலம் புனைந்து ஆடும் வாழ்க்கைக் கூத்தை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் காட்டும் வகை இது.

★

மணிமேகலையிலும் இந்தக் கருத்தை ஓரிடத்தில் காண்கிறோம். அறவணவடிகளின்முன் மாதவியும் சுதமதியும் மணிமேகலையும் நிற்கிறார்கள். முற்பிறப்பில் அம்மூவரும் சகோதரிகளாக இருந்தவர்கள். மணிமேகலை தன் முற்பிறப்புச் செய்தியை மணி பல்லவத்தில் இருந்த புத்த பீடிகைக் காட்சியால் அறிந்தாள். பின்னும் பழைய செய்திகளை அறவணவடிகள் வாயிலாகத் தெரிந்து அறங் கேட்க வந்திருக்கிறாள். முற்பிறப்பில் சகோதரிகளாக இருந்த மூவரும் இப்பிறப்பில் தாய், தோழி, மகளாக வந்திருக்கிறார்கள். அறவணவடிகள் அவர்களைக் கண்டவுடன், "நல்ல கோலம் புனைந்திருக்கிறீர்கள்! சென்ற பிறவியிலே அணிந்த கோலம் வேறு, இப்போது கொண்ட கோலம் வேறு. நாடகம் ஆடும் மகளிரைப் போல அல்லவோ இருக்கிறீர்கள்?" என்று வாழ்க்கைக் கூத்தையும் உலகமாகிய நாடக மேடையையும் நினைவுறுத்துகிறார் அறவணவடிகள்.

> ஆடும் கூத்தியர் அணியே போல
> வேற்றோர் அணியொடு வந்தீரோ ?

என்று அவர் பேசுகிறார்.

வாழ்க்கையென்னும் கூத்தை ஆடும் உயிராகிய கூத்தன் வெவ்வேறு கோலம் கொண்டு இயங்கும் நாடக மேடையாக உலகம் இருக்கிறது. நாடகத்தை நடிக்கும் நாம் பிறர் நடிப்பதையும் பார்க்கிறோம். ஒவ்வொருவர் வாழ்க்கையும் ஒவ்வொரு பெரிய நாடகத்தின் சிறு சிறுபகுதி. இந்தக் கூத்தை யாடுகிற உயிர்கள் நாடக மேடையில்

ஆடும் கலைஞர்களைப்போல இருப்பினும் ஒரு பெரிய வேற்றுமை உண்டு. கலைஞர்கள் தம் அறிவுக்கும் அநுபவத்துக்கும் ஏற்பத் தாம் எப்படி நடிக்கவேண்டும் என்பதை உணர்ந்து ஆடுகிறார்கள். உயிர்கள் தாம் ஆடும் கூத்தின் தத்துவத்தை உணர்வதில்லை; அடுத்த கோலம் இன்னது என்பதையும் தெரிந்துகொள்வதில்லை. ஏனெனின் அவர்கள் எல்லோரையும் ஆட்டுகிற கூத்தருட் கூத்தனாகிய ஒருவன் இருக்கிறான். அவன் ஆட்டும் பாவைக் கூத்தாக வாழ்க்கை அமைகிறது. அதனால்தான் மணிவாசகர்,

> யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு
> வானாகி நின்றாயை என் சொல்லி வாழ்த்துவனே!

என்றார்.

# கால் பிடிக்கத் தாதி உண்டு

பல நாட்களுக்கு முன் நாடக மேடையில் பாடிவந்த பாட்டு ஒன்று எங்கும் அடிபட்டுக்கொண்டிருந்தது.

கட்டிலுண்டு மெத்தையுண்டு—தங்கமே தங்கம்
கால்பிடிக்கத் தாதியுண்டு—தங்கமே தங்கம் !

என்பது அந்தப் பாட்டு.

ஒருவன் ஒரு பெண்ணிடம் தன் வளவாழ்வைக் கூறுகிறான். "நீ என்னை மணம் செய்துகொண்டு விட்டால் என் மாளிகையில் சுகமாக வாழலாம். இன்ப வாழ்வுக்குரிய வசதிகளை உடையவன் நான். இனிய விருந்தை உண்டு கவலையின்றி உறங்கலாம்" என்று சொல்கிறான். வாழ்க்கையில் தலைமையான காரியங்கள் இரண்டு: உண்பதும் உறங்குவதும். அந்த இரண்டும் சரியானபடி அமைந்தால் இன்பம்; இல்லாவிட்டால் துன்பந்தான்.

உறக்க இன்பம் கிடைக்கும் என்பதைச் சொல்கிறான். உறங்குவதற்கு வேண்டிய வசதிகள் இருக்கின்றனவாம். கட்டில் இருக்கிறது; மெத்தை இருக்கிறது; படுத்துக் கொண்டால் கால் பிடிக்கத் தாதிமார் இருக்கிறார்கள்.

கால் பிடித்தால் தூக்கம் வரும். அது ஓர் இரகசியம். கட்டிலும் மெத்தையும் உண்டாக்காத தூக்கம் கால் வருடினால் வந்துவிடும். அதற்கென்று தாதியரும் ஏவலாளர்களும் செல்வர்களின் வீட்டில் இருப்பார்கள்.

★

அன்புடைய காதலர்கள் கால் வருடும் பணியை ஏவலர்களுக்கு அளிக்கமாட்டார்கள். தம் கணவன்மாருடைய

அடியை வருடி இளைப்பாற்றித் தூங்கச் செய்வது அன்புடைய மனைவியர் அறிந்த கலை. இலட்சிய மனைவியாக வாழ்ந்த திருவள்ளுவர் இல்லக்கிழத்தியாகிய வாசுகியார் இந்தக் கலையில் தேர்ந்தவர். தாமே அடிசில் அட்டு வள்ளுவருக்குப் பரிமாறும் அன்புடையவர். வள்ளுவருடைய உணவுக்கு இனிமையும் உறக்கத்துக்கு அமைதியும் தரும் பெருமாட்டியார் அவர். தம் கணவர் துயிலப் புகுந்தால் மெல்ல அவருடைய அடியை வருடுவார். அதனால் இன்றுயில் நாயனாரைக் கவ்விக் கொள்ளும். அவர் தூங்கியபின் துயில்வார் வாசுகியார். ஆனால், அவர் விழித்தெழுவதற்குமுன் எழுந்து விடுவாராம். வாசுகியாருடைய பிரிவினால் வள்ளுவர் உறக்கத்தை இழந்தார். அடிவருடித் தூங்கும் பழக்கம் உடையவரல்லவா?

அடிசிற் கினியாளே, அன்புடை யாளே
படிசொல் தவிராத பாவாய்—அடிவருடிப்
பின்தூங்கி முன்எழூஉம் பேதையே, போதியோ!
என்தூங்கும் என்கண் இரா?

கால் பிடிக்கும் தாதியாக அன்புடைய மனைவியே பணி செய்யும் இன்ப வாழ்வு வள்ளுவருக்கு வாய்த்தது.

*

அன்பு மிகுதியினால் காதலனும் காதலிக்குப் பணிவிடை செய்வதுண்டு. உலகில் வாழ்ந்த மக்களைப் பற்றிச் சொன்னால் ஒருகால் சினம் அடைந்தாலும் அடையலாம். அருணகிரி நாதர் முருகனுடைய காதலைப் பாடுகிறார். அவன் வள்ளி நாயகியினிடம் வைத்த காதலால் அவளுக்குப் பலபடியாகப் பணிவிடை செய்து மகிழ்வதைப் பல இடங்களில் பாடியிருக்கிறார். கற்பனையே ஆனாலும் அப்படிப் பாடுவதில் இன்பம் காணுவது பக்தர்களுக்கு இயல்பு.

வள்ளி நாயகியைத் தூங்க வைக்கிறான் முருகன். அடி வருடினால் தூக்கம் வந்து விடுமல்லவா? அவன் வள்ளியின் பாதங்களை வருடுகிறானாம்.

> பாகு கனிமொழி மாது குறமகள்
> பாதம் வருடிய மணவாளா!

என்று திருப்புகழில் வருகிறது.

*

கணவன் மனைவியரிடம் மாத்திரமா அன்பு இருக்கிறது? தந்தைக்கும் மகனுக்கும் இடையே அன்பு உண்டு; தாய்க்கும் குழந்தைக்கும் இடையே அன்பு உண்டு; ஆசிரியனுக்கு மாணாக்கனிடம் அன்பு உண்டு; நண்பர்களிடையே அன்பு உண்டு. அவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை. அன்பினால் கால் வருடும் பணியை யாரும் மேற்கொள்ளலாம்.

இந்த உண்மையைக் கண்ணன் புலப்படுத்தினான். அவனைத் தேடிக்கொண்டு அவனுடைய இளம்பருவ நண்பரான குசேலர் வருகிறார். அவன் வாழும் துவாரகையை நோக்கிப் பல காவதம் நடந்து வருகிறார். மெலிந்த உடலும் தவத்தாற் சுருங்கிய உணவும் படைத்த அவர் எப்படியோ கண்ணனை அடைந்து விடுகிறார். கண்ணன் அவரைக் கண்டவுடன் ஆராத காதல் மீதூர ஓடிச் சென்று தழுவிக் கொள்கிறான். வேண்டிய உபசாரங்களைச் செய்கிறான். அறுசுவை உண்டி அளிக்கிறான். உண்ட பிறகு இளைப் பாறச் செய்கிறான். கட்டிலைப் போட்டு மெத்தையை விரித்துப் படுத்துக்கொள்ளச் செய்கிறான். "பாவம், எவ்வளவு தூரம் நடந்து வந்திருக்கிறாய்! சுகமாகத் தூங்கு" என்று சொல்லிக் கால்களை வருடுகிறான். "இந்த மலரடி இரண்டும் வழி நடந்து இளைப்புற்றனவே!" என்று சொல்லிச் சொல்லி வருடுகிறான். அப்படி வருடும்போது

அவனுக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்றும்; தன் நண்பனுக்குத் தன் செல்வத்தால் உபகாரம் செய்வதை விடத் தன் கையால் செய்யும் உபசாரம் அவனுக்கு உயர்வாக இருந்தது. அடியை வருடித் தூங்கப் பண்ணுகிறான்.

வழிநடந் திளைத்த வேஇம் மலர்அடி இரண்டு மென்று
கழிமகிழ் சிறப்ப மெல்ல வருடினான் கமலக் கண்ணன்

என்பது குசேலோபாக்கியானம்.

அடி வருடித் துயிலப் பண்ணும் கலையில் முருகனும் கண்ணனும் சிறந்தவர்கள் போலும்!

*

இதுவரையில் மக்களுலக நிகழ்ச்சிகளைப் பார்த்தோம். மக்களின் வாழ்வை இயற்கையும் நடத்திக் காட்டுவதாகக் கவி புனைதல் கவிஞர் இயல்பு. மக்கள் வாழ்க்கையைக் கண்டு தம் உணர்ச்சியைக் காட்டுவதாகவும், மக்களைப் போலவே செயல் புரிவதாகவும் சொல்வது கற்பனையின் வகைகள். இந்தத் திறம் எல்ல மொழிகளிலும் உண்டு.

திருநெறித் தமிழ் பாடிய நால்வர்களில் திருஞானசம்பந்தர் இயற்கை யெழிலைப் பாடுவதில் வல்லவர்; முத்தமிழ் விரகர் என்னும் சிறப்புக்குரியவர். இயற்கைக் 'ாட்சிகளைக் கற்பனையும் தன்மை நவிற்சியும் அமையப் பாடுபவர் அவர்.

அடி வருடித் துயில்கொள்ளும் அன்பு வாழ்வை அவர் இயற்கையிலே காணுகிறார். மருத நில வளத்தைப் பாடும் போது அப்படி ஒரு காட்சியை அமைக்கிறார்.

மருதத் தெய்வத்தின் தனியரசுப் பீடமாக விளங்குவது சோழ நாடு. அங்கே திருவையாறு சிறந்த தலம்; இயற்கை

எழில் குலுங்கும் ஊர். திரிபுரத்தை எரித்த வில்லாளன், கயிலாய மலையாளன் சேரும் கோயில் அங்கே இருக்கிறது.

நீர்வளமும் நிலவளமும் நிறைந்த ஊர் அல்லவா? நெல்லும் கரும்பும் நிமிர்ந்து வளர்கின்றன. கரும்புத் தோட்டத்துக்கு நம்மை அழைத்துச் செல்கிறார் சம்பந்தப் பெருமான். எங்கே பார்த்தாலும் கரும்புகள் தளதள வென்று வளர்ந்திருக்கின்றன. ஒரு கவலையும் இன்றி வளரும் செல்லப் பிள்ளைகள் போல அவை நிற்கின்றன.

"கவலையில்லாமல் இவை கண் வளர்கின்றதைப் பாருங்கள்" என்கிறார் சம்பந்தர். கண் என்பது கணுவுக் குப் பெயர். கரும்பு வளர வளரக் கணுவும் வளரும். கணுவின் வளர்ச்சியே கரும்பின் வளர்ச்சி என்றுகூடச் சொல்லலாம். கணு முற்றினால் கரும்பு முற்றும். கரும்பு கண் வளர்கிறது; கணு வளர்ந்ததனால் வளர்ச்சி பெறுகிறது. அதோடு கவலையில்லாமல் சுகமாகத் தூங்குகிறது. கண் வளர்தல் என்பது தூங்குவதற்கும் பெயர்.

எங்கேயோ சிறு குன்றும் அதில் சோலையும் உள்ளன. அங்கே குயில்கள் இருந்து கூவுகின்றன. குழந்தையைத் தூங்கப்பண்ணவேண்டுமானால் தாலாட்டுப் பாடவேண்டும் அல்லவா? இங்கே கரும்பு கண் வளர்வதற்காகக் குன்றெல்லாம் குயில்கள் கூவுகின்றன. பாட்டு மாத்திரம் போதாது. காலை வருடினால் உடனே தூக்கம் வரும். இந்தச் செல்வக் குழந்தையை அடிவருட யார் இருக்கிறார்? மிக மிக மென்மையான கரமுடையவர்களாக இருந்தால் சுகமாக இருக்கும். இங்கே அப்படி ஒருவர் வருகிறார். அழகுக் குழந்தையின் காலை வருடுபவர் அழுக்குக் கையோடு இருக்கலாமா? அவர் கை மணக்கிறது. மலர்களிலுள்ள மணம் அந்தக் கையில் மணக்கிறது. அவர் அடி வருடுகிறார்.

இவ்வளவு சிறப்புடையவர் யார்? நல்ல தேன் நிரம்பி யிருக்கும் மலர்களில் பாய்ந்து அங்குள்ள மணத்தை வாரிக் கொண்டுவந்து தென்றலார் அடிவருடுகிறார். தென்றலுக்கு மென்மை இல்லையென்று யார் சொல்வார்கள்? அதற்கு மந்தமாருதம் என்ற பெயர் இருப்பது தெரியாதா? தென்றல் வீசினால் தூக்கம் வரக் கேட்கவேண்டுமா?

வானமே விதானமாக வயலே மெத்தையாகக் குயில்கள் பாடப் பாட, தென்றலார் அடிவருட, செழுங் கரும்பாகிய செல்லக் குழந்தை தூங்குகிறது. புரமூன்றையும் எரித்த சிலையாளி வாழும் தலம், தென்றலார் அடிவருடச் செழுங் கரும்பு கண் வளரும் திருவையாறு.

நின்றுலாம் நெடுவிசும்பில் நெருக்கிவரு
புரம்மூன்றும் நீள்வாய் அம்பு
சென்றுலாம் படிதொட்ட சிலையாளி
மலையாளி சேரும் கோயில்
குன்றெலாம் குயில்கூவக் கொழும்பிரச
மலர்பாய்ந்து வாசம் மல்கு
தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு
கண்வளரும் திருவை யாறே.

[விசும்பில் - வானத்தில்; தொட்ட - தொடுத்த; சிலையாளி - வில்லையுடையவன்; பிரசம் - தேன்.]

அடி வருடினால் கண்வளரும் இயல்பைக் கரும்பினிடம் காட்டினார் சம்பந்தர்.

ஒருவர் மனம் மகிழவேண்டுமானால், அவர் காலைப் பிடித்துக் கையைப் பிடித்துப் பணி செய்வது உலகியல். காலைப் பிடிப்பதும் கையைப் பிடிப்பதும் இளைப்பை ஆற்றி அமைதியைத் தரும் செயல்கள். செல்வர்கள் அவற்றைச் செய்வதற்கு ஏவலாளர்களை வைத்திருப்பார்கள்.

ஏவல் செய்வதையே கால் கை பிடித்தல் என்று சொல்லும் வழக்கம் உண்டு. ஒருவர் மனத்தைக் குளிரப்பண்ண அவர் குறிப்பறிந்து ஏவல் செய்வது ஒரு வழி; அவர் கால் கை பிடிப்பது ஒரு முறை.

கால் கை பிடித்தால் காரியத்தைச் சாதிக்கலாம். அதையே, 'காக்கை பிடித்துக் காரியத்தைச் சாதிக்கிறுன்' என்று சிதைத்து வழங்குகிருர்கள். இன்று எல்லோரும் அடிக்கடி வழங்கும் "காக்கை பிடிக்கிற" செயல் கால் கை பிடிக்கிறதையே குறிக்கிறது. கால் கை சிதைந்து காக்கை ஆகிவிட்டது.

# தென்றல் வீசுகிறது

மிகவும் இனிய பொருள்களுக்கு ஓர் அட்டவணை கொடுங்கள் என்று சொன்னால் நமக்கு உணவுப் பண்டங்களே நினைவுக்கு வரும். நாக்குச் சுவையன்றி வேறு சுவை நமக்குத் தெரிவதில்லை. கவிஞர்களுக்கோ, உலகம் முழுவதும் இனிய பொருள்கள் நிரம்பியிருக்கின்றன. வீணையின் ஒலி இனியது. மாலை நேரத்தில் திங்கள் வீசும் வெண்ணிலா இனிமைப் பிழம்பு. அப்போது வீசும் தென்றல், இனிமையினும் இனிமை. இளவேனிற் காலமோ, இயற்கை மகளின் எழிலை எடுத்துக்காட்டும் பருவம். மலர் மலர்ந்த தண்ணிய பொய்கை இன்பமயமானது. இந்த இனிய பொருள்களையெல்லாம் ஒரு சேர வைத்துப் பாடுகிறார் அப்பர். இறைவனுடைய இணையடி நீழல் இந்தப் பொருள்களைப் போல இனித்திருக்குமாம்.

> மாசில் வீணையும் மாலை மதியமும்
> வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
> மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
> ஈசன் எந்தை இணை யடி நீழலே

என்று இறைவனது இணையடி நீழலுக்குப் பல இனிய பொருள்களை உவமை கூறுகிறார் அப்பர்.

அப்பர் சுவாமிகள் கூறும் ஐந்து பொருள்களில் ஒன்று தென்றல். இளவேனிற் காலத்தில் தென்திசையிலிருந்து வீசும் அதற்கு, மந்தமாருதம் என்று வடமொழியில் பெயர் அமைந்திருக்கிறது. தெற்கிலிருந்து வருவதால் 'தென்றல்' என்ற பெயர் தமிழில் வந்தது. இப்படியே வடக்கிலிருந்து வீசும் காற்றுக்கு 'வாடை' என்றும்,

மேற்கிலிருந்து வீசுவதற்குக் 'கோடை' என்றும், கீழ் காற்றுக்குக் 'கொண்டல்' என்றும் தனித் தனியே பெயர் உண்டு.

தமிழ்நாடு பாரத நாட்டின் தெற்குப் பகுதியில் இருக்கிறது. இதற்குத் தென்பகுதியில் பாண்டி நாடு உள்ளது. அதில் உள்ளது பொதியில் மலை. அந்தப் பொதியிலிலிருந்து பிறந்து வருவது தென்றல் என்று கூறுவது புலவர் மரபு. அதனால் அதற்கு மலய மாருதம் என்று பெயர் வந்தது. பொதியிலுக்குத் 'தென்றல் வெற்பு' என்ற காரணப் பெயரும் ஏற்பட்டது.

ஆவியந் தென்றல் வெற்பு

என்று ஒரு புலவர் பொதியிலைக் குறிக்கிறார்.

தென்றலைப் புலவர்கள் பலவகையாக வருணித்திருக்கிறார்கள். பொதியிலில் உள்ள சந்தன மரங்களோடும் அருவிப் புனலோடும் தோழமை கொண்டு வீசுவது அது. மன்மதனுக்கு அது தேராக இருப்பது. காதலர்களின் உள்ளத்தே காமப் பயிரை விளைவிக்கத் தென்றல் உதவுகிறது. காவியங்களிலும் தனிப் பாடல்களிலும் தென்றலின் பெருமையைப் பலபடியாகக் காணலாம். பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் 'தென்றல் விடு தூது' என்று ஒரு பிரபந்தம் பாடியிருக்கிறார்.

★

இளங்கோவடிகள், சிலப்பதிகாரத்தில் தென்றலைப் பல இடங்களில் தவழவிடுகிறார். கோவலனும் கண்ணகியும் திருமணம் செய்துகொண்டு தனியே ஏழடுக்கு மாளிகை ஒன்றில் வாழ்கிறார்கள். அப்போது தென்றல் வந்து இன்புறுத்துகிறதாம். அதைப் பாடுகிறார். எழுநிலை மாடமாகிய அந்த மாளிகையில், இடைநிலமாகிய நான்காவது மாடியில் இருந்தபோது தென்றல் வீசுகிறது.

அது பல மலர்களின் மணத்தை அளைந்து வருகிறது. செங்கழுநீர் மலரை மெல்லத் தடவுகிறது. அப்பால் செவ் வாம்பல் மலரைத் தழுவுகிறது. பிறகு குவளையுடன் இரக சியம் பேசுகிறது. வயல்களில் தன் இதழ்களை விரித்துக் கொண்டு தாமரை மலர்ந்திருக்கிறது. அதில் வண்டுகள் ஒலிக்கின்றன. தென்றல் அதனிடம் சென்று அளைகிறது. அங்கங்கே உள்ள மணத்தைப் பூசிக்கொண்டு வரும்போது, அதற்கு ஒரு தோழன் கிடைக்கிறான். அந்தத் தோழனும் தென்றலைப் போலவே மலர்களின் மணத்தை நுகர்ந்து தாதை அளைந்து திரிகிறான். வண்டுதான் அந்தத் தோழன். ஊர் ஊராகச் சுற்றும் பிரயாணிகள், ஒருவரை ஒருவர் கண்டால் தங்கள் தங்கள் அநுபவங்களைக் கூறிக்கொள் வார்கள். பிறகு ஒன்றாகவே செல்லுவதும் உண்டு. இங்கே தென்றல் தன் அநுபவத்தை வண்டோடு சொல்லியது.

> கழுநீர் ஆம்பல் முழுநெறிக் குவளை
> அரும்புபொதி அவிழ்ந்த சுரும்பிமிர் தாமரை
> வயற்பூ வாசம் அளைஇ

வந்த தன் பெருமையை அது பேசுகிறது.

[முழு நெறி - இதழ் ஒடிக்காத பூ; பொதி - கட்டு; சுரும்பு - வண்டு; அளைஇ - கலந்து.]

வண்டு எந்த எந்த மணத்தை நுகர்ந்து வருகிறது தெரியுமா? தென்றல் வயல்பக்கமாக வந்தது. வண்டு கடற் கரைப் பக்கமாக வந்து, பூம்பொழிலினூடே புகுந்து வரு கிறது. கடற்கரையில் தாழை தன் வெண்மையான மலரை விரித்துக்கொண்டு நிற்கிறது. அதனிடம் சிறிது தங்கி விட்டு, அடுத்தபடி உள்ள பொழிலில் மாலையைப் போலப் பூக்கும் மாதவி மரத்தில் ஊதிவிட்டுச் சண்பக மரத்துக்குப் போயிற்று. அதில் உள்ள தாதைத் தேர்ந்து உண்டது.

தென்றல் புகுந்த வயலும் வண்டு புகுந்த கடற்கரையும் பூம்பொழிலும் காவிரிப்பூம் பட்டினத்துக்கு அருகில் உள்ளவை.

இத்தனை மலர்களையும் அளாவி வரும் வண்டுக்குத் திருப்தி உண்டாகவில்லை. இன்னும் பலவகை மலர்களின் மணத்தை நுகர ஆசை. தனித்தனியே ஒவ்வொரு பூவாக நாடிப் பறந்து செல்வதற்குப் போது எங்கே? வண்டு அநுபவம் உள்ளது. காவிரிப்பூம்பட்டினத்து மகளிர் தம் கூந்தலில் நறுமணம் வீசும் பலவகை மலர்களை அணிவார்கள். இந்தச் செய்தி அதற்குத் தெரியும். அவர்கள் கூந்தலுக்கே ஒருவகை நன்மணம் உண்டு. அங்கே போனால் பல மலர்களையும் ஊதலாம். இந்த எண்ணத்தால் அது உலாவுகிறது. எப்போது அங்கே போய்ச் சேருவோம் என்று ஏங்குகிறது.

தென்றலும் வண்டும் சந்தித்துப் பேசின. வண்டு, "இந்த மலர்களைத் தேடி நாம் போய் நுகர்கிறோமே; இவை கிடக்கட்டும். காவிரிப்பூம்பட்டினத்து மாதர்களின் கூந்தலுக்குள் புகவேண்டும். அங்குள்ள மலர்களை அளையவேண்டும். அந்த இன்பம் வேறு எங்கே கிடைக்கும்?" என்று பெருமூச்சு விட்டது.

"நாம் அங்கும் போகலாமே" என்றது தென்றல்.

"வா, போகலாம்!" என்று சொல்லிய வண்டு புறப்பட, அதனுடன் தென்றலும் புறப்பட்டது.

பெண்கள் அங்கே சாளரங்களைத் திறந்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவற்றில் மணி மாலைகளைத் தொங்கவிட்டிருக்கிறார்கள். மாணிக்கங்களைப் புதைத்து அழகு செய்திருக்கிறார்கள். சாளரங்களில் சிறிய சிறிய கண்கள்-துவாரங்கள்-இருக்கின்றன. மக்கள் புகுவதற்கு வாயில்கள் இருக்கின்றன; சாளரங்களின் வழியாக

அவர்கள் புக முடியாது. வண்டும் தென்றலும் வருவ தற்காக அமைந்த வாயில்களைப் போலச் சாளரங்கள் அழகுடன் திகழ்கின்றன.

அந்தச் சாளரத்தினூடே செவ்வி பார்த்து வண்டைத் துணையாகக் கொண்டு மணம் நிரம்பிய தென்றல் புகு கிறது.

......அயற்பூ
மேதகு தாழை விரியல்வெண் தோட்டுக்
கோதை மாதவி சண்பகப் பொதும்பர்த்
தாதுதேர்ந் துண்டு மாதர்வாள் முகத்துப்
புரிகுழல் அசைத்துப் புகல்ஏக் கற்றுத்
திரிதரு சுரும்பொடு செவ்வி பார்த்து
மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த
கோலச் சாளரக் குறுங்கண் நுழைந்து
வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்.

[அயற்பூ-வயலில் நீரிலே பூக்கின்ற மலர்கள் அல்லாத வேறு பூக்கள்; விரியல் - விரிதலையுடைய; தோடு - மடல்; கோதை மாதவி - மாலை போலப் பூக்கும் குருக்கத்தி; பொதும்பர் - மரம்; அளகம் - முன்னுச்சி மயிர்; புகல் ஏக்கற்று - புகுதலுக்கு ஏங்கி; செவ்வி - சந்தர்ப்பம்; மாலைத் தாமம் - வரிசையான மாலை.]

★

வசந்த காலம் வந்துவிட்டது. வசந்தன் மன்மதனுக் குத் தோழன். மன்னன் வருகையைச் சின்னம் ஊதித் தெரிவிப்பது வழக்கம். காமனுக்குச் சின்னம் அல்லது காகளமாக இருப்பது குயில்.

இளவேனில் வந்தது. தென்றல் வீசியது. அதுகாறும் வாய் மூடியிருந்த குயில் குரல் எழுப்பிப் பாடத் தொடங் கியது. இதை அழகாக வருணிக்கிறார் இளங்கோவடிகள்.

உலகத்தில் எங்கும் அரசு வீற்றிருப்பவன் மன்மதன். அவனுடைய தோழன் வந்து தூண்டினால் அவன் படைக

கோலங் கொள்வான். இப்போது வசந்தன் வந்துவிட்டான். படைகள் யாவும் கோலம் கொள்ளும். அதை யாவருக்கும் அறிவிக்கும் காகளம் குயில். அந்தக் குயிலை ஊதும்படிச் செய்யத் தென்றல் தூதுவனாகச் செல்கிறது.

"நம் மன்னனுடைய தோழனாகிய வசந்தன் வந்துவிட்டான். இனிமேல் காமன் படை கோலம் கொள்ளும். நீ இதை யாவருக்கும் அறிவிப்பாயாக" என்று சொல்கிறதாம். உடனே குயிலோன், குரல் எழுப்புகிறான்.

அரைசுவீற் றிருந்த உரைசால் சிறப்பின்
மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய
இன்னிள வேனில் வந்தனன் இவண்என
வளங்கெழு பொதியில் மாமுனி பயந்த
இளங்கால் தூதன் இசைத்தனன் ஆதலின்
மகர வெல்கொடி மைந்தன் சேனை
புகர்அறு கோலம் கொள்ளும்என் பதுபோல்
கொடிமிடை சோலைக் குயிலோன் என்னும்
படையுள் படுவோன் பணிமொழி கூற.[1]

[இவண் - இங்கே; பயந்த - பெற்ற; இளங்கால் - தென்றல்; மகர வெல்கொடி மைந்தன் - மன்மதன்; புகர் அறு - குற்றம் அற்ற; மிடை - நெருங்கிய; படை உள்படுவோன் - படையில் இருந்து வேலை செய்பவன்.]

★

கோவலனும் மாதவியும் கவுந்தியடிகளோடு வடக்கேயிருந்து தெற்கே போய்க் கொண்டிருந்தார்கள். மதுரைக்கு அண்மையில் ஓரிடத்துக்கு வந்தபோது அங்குள்ளவர்களிடம், "மதுரை இன்னும் எவ்வளவு தூரம் இருக்கிறது?" என்று கேட்டான் கோவலன். அவர்கள், "இதோ, பக்கத்தில்தான் இருக்கிறது" என்று சொன்னார்கள். அதற்குக் காரணமும் காட்டினார்கள். "இதோ, இந்தத் தென்றற் காற்றே மதுரை அருகில் இருக்கிறது என்று சொல்ல

1. சிலப்பதிகாரம், 8:5-13.

வில்லையா? பொதியிலிலிருந்து வருகிற தென்றல் என்று இதை நினைக்கிறீர்கள்? இது மதுரைத் தென்றல். புலவர் செந்நாவிலே பொருந்திய வீறுடைய தென்றல். இது எப்படித் தெரிகிறது என்று கேட்கிறீர்கள்? பொதியில் தென்றலில் அந்த மலையில் உள்ள மணந்தான் வீசும். இதில் மதுரையிலுள்ள மணங்கள் எல்லாம் வீசுகின்றனவே! சிறிது கூர்ந்து கவனியுங்கள்" என்கிறார்கள்.

"இதோ, இப்போது பாருங்கள்; அகிற்குழம்பின் மணம் தெரிகிறதா? குங்குமக் கலவையின் மணம் தெரிகிறதா? இருங்கள், இதோ, இதுதான் சவ்வாது வாசனை. இது குளிர்ச்சியாக இருக்கிறதல்லவா? இதுதான் சந்தன நறுமணம். இது கஸ்தூரி. இத்தனை குழம்புகளில் விளையாடிவிட்டு இந்தத் தென்றல் வருகிறது. இவ்வளவும் பொதியிலில் ஏது? வளங்கெழுமிய மதுரையில்தான் ஒருங்கே இருப்பதைக் காணலாம்."

> காழ்அகிற் சாந்தம், கமழ்பூங் குங்குமம்,
> நாவிக் குழம்பு, நலங்கொள் தேய்வை,
> மான்மதச் சாந்தம், மணங்கமழ் தெய்வத்
> தேமென் கொழுஞ்சே றாடி...
> மதுரைத் தென்றல் வந்தது காணீர்![1]

[காழ் - வைரமுடைய; நாவி - சவ்வாது; தேய்வை - அரைத்த சந்தனம்; மான்மதம் - கஸ்தூரி.]

இவற்றோடு நிற்கவில்லை; இந்த மணப் பொருள்கள் வெளியிலிருந்து வந்த சரக்குகளை அரைத்து அமைத்தவை. மதுரையில் அங்கங்கே சிறுபொழில்கள் இருக்கின்றன. வீடுகளில் மல்லிகை, முல்லை முதலிய கொடிகளை வளர்க்கிறார்கள். அந்த மலர்களின் மணத்தையும் அளைந்து வருகிறது மதுரைத் தென்றல். அதில் தாது சேர்ந்த கழுநீர் மணம் வீசுகிறது. சண்பகமாலையின் நறுமணம் கலந்திருக்கிறது. மனையிலே வளரும் மாதவி என்ன, மல்லிகை என்ன,

1. சிலப். 13 : 115-32.

முல்லை என்ன-இவற்றைப் பறித்து மாலை கட்டி அணிந்திருக்கிறார்கள் மக்கள். அந்த மாலைகளையே அணையாகக் கொண்டு சிறிதே இளைப்பாறிவிட்டுத் தென்றல் வருகிறதாம்.

ஆங்குத்
தாதுசேர் கழுநீர் சண்பகக் கோதையொடு
மாதவி மல்லிகை மனைவளர் முல்லைப்
போதுவிரி தொடையற் பூஅணை பொருந்தி
மதுரைத் தென்றல் வந்தது காணீர்![1]

[கோதை - மாலை; மாதவி - குருக்கத்தி; அணை - மெத்தை.]

அவர்கள் இதோடு நிறுத்தவில்லை. அந்தத் தென்றலில் உள்ள மணத்தைக் கொண்டே மதுரைமா நகரத்திலுள்ள வளங்கள் எல்லாவற்றையுமே சொல்லிவிடுவார்கள்போல் இருக்கிறது!

"இப்போது பாருங்கள்: அவரவர் வீடுகளில் சமையல் செய்கிறார்கள். அந்த அட்டிற் புகையின் மணம் இது. அகன்ற அங்காடி வீதியில் அப்பம் சுட்டு விற்கிறவர்கள் இருக்கிறார்கள். அந்தப் புகை இது. ஆடவரும் மகளிரும் கூந்தலை உலர்த்த நறும்புகை புகைக்கிறார்கள். அந்தப் புகையின் மணம் இது. இதை நன்றாகப் பாருங்கள். அங்கே நடைபெறும் வேள்வியில் ஆகுதி கொடுக்கிறார்கள். அந்தப் புகை மணக்கிறது. இப்படிப் புகைகளின் மணத்தை ஆராய்ந்தால் பல வகைகளைக் காணலாம்."

அட்டில் புகையும் அகல்அங் காடி
முட்டாக் கூவியர் மோதகப் புகையும்
மைந்தரும் மகளிரும் மாடத் தெடுத்த
அந்தீம் புகையும் ஆகுதிப் புகையும்
பல்வேறு பூம்புகை அளை இ
மதுரைத் தென்றல் வந்தது காணீர்![2]

[அட்டில் - சமையலறை; கூவியர் - அப்பம் விற்போர்.]

---

1. சிலப். 13 : 119-32. 2. ஷை. 13:122-32.

"இவை நகரத்திலுள்ள பல இடங்களிலிருந்து வருவன. பாண்டியனது அரண்மனையிலிருந்து வரும் மண வகைகளுக்குக் கணக்கே இல்லை. எத்தனையோ விதமான கலவை நறும்பொருள்கள் அங்கே இறைபடுகின்றன. அந்த மணத்தை நுகர்ந்தால் அப்புறம் வேறு வேலையே செய்யத் தோன்றாது. உயிரைப் பிணித்து மயங்கச் செய்பவை அவை. "இப்படி அழகிய சந்தனக் குழம்பு முதலியவற்றின் மணத்தையும், மலர்களின் மணத்தையும், புகைகளின் மணத்தையும், அரண்மனையிலுள்ள நறுமணத்தையும் அளாவி, புலவர் நாவிலே புகழ் பெறும் மதுரைத் தென்றல் வந்தது. அதனால் மதுரை அருகில் இருக்கிறதென்று தெரியவில்லையா?" என்று கேட்கிறார்கள்.

......வெல்போர்
விளங்குபூண் மார்பிற் பாண்டியன் கோயிலின்
அளந்துணர் வறியா ஆருயிர் பிணிக்கும்
கலவைக் கூட்டம் காண்வரத் தோன்றிப்
புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பிற்
பொதியில் தென்றல் போலா தீங்கு
மதுரைத் தென்றல் வந்தது காணீர்![1]

[கோயில் - அரண்மனை. நிவப்பு - உயர்வு.]

இங்கே தென்றல் மதுரை வளத்தையே ஒருவாறு தெரிவிக்கும் தூதனாக உதவுகிறது.

★

ஒரு புலவர் தென்றலின் நடைக்கு உவமானம் சொல்கிறார். மெல்ல வீசுவதால் அதற்கு மென்கால் என்றும் மந்தமாருதம் என்றும் பெயர் வந்தன. அதன் மெத்தென்ற நடைக்கு ஏற்ற உவமையை அழகாகச் சொல்கிறார் புலவர். ஒரு பெண்ணின் நடையைப்போல அது மெத்தென்ற நடை

1. சிலப். 13:126-32.

யிட்டு மெல்ல அசைந்து வருகிறதாம். அந்தப் பெண், எத்தகையவள் ?

அவள் மங்கல மங்கை; சுமங்கலி; ஆணழகன் ஒருவனுக்கு ஏற்ற அழகு; காதலி. வளவாழ்வு நிரம்பிய அரச குலத்தில் வந்த பெண். அவள் நன்றாக வாழ்ந்து இப்போது கருவுற்றிருக்கிறாள். மாசமோ நிறைந்துவிட்டது. அவள் உடம்பு முழுவதும் ஆபரணங்கள். அவள் நடந்து வருகிறாள். மெல்ல மெல்ல அடியை எடுத்து வைத்து வருகிறாள். அவளைப்போல இந்தத் தென்றல் அசைகிறதாம். 'அத்தகைய தென்றல் வீசும் செந்தமிழ் நாட்டையுடைய பாண்டியனே !' என்று புலவர் பாடுகிறார்.

> மங்கல மங்கையராய்
> மன்னவர் கன்னியராய்
> மைந்தர் வயிற்றினராய்
> வாழ்வின ராய்அதிலே
> திங்கள் நிறைந்துவரும்
> சேயிழை யார்நடைபோல்
> தென்றல் அசைந்துவரும்
> செந்தமிழ் நாடுடையாய் !

தென்றல் மந்த மந்த மணந்து வரும் மென்னடைக்கு இதைவிடச் சிறந்த உவமையைச் சொல்ல இயலுமா ?

# நரைத் தூது

பழைய காலம் அது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் என்று சொல்லலாம். உண்மையைச் சொல்லும் புலவர்கள் இருந்த காலம். நரிவெரூஉத் தலையார் என்று ஒரு புலவர் இருந்தார். அவர் தலையைக் கண்டு நரி அஞ்சியதாம். அவர் பாண்டியனையும் சோழனையும் சேரனையும் பார்த்துப் பழகியவர். ஏழைகளிடமும் செல்வர்களிடமும் பழகி, இரு சாரார் இயல்புகளையும் அறிகிறவர். அரசர்களின் அவைக் களத்தில் உள்ள மக்கள் பல்வேறு இயல்புடையவர்களாக இருப்பதை நன்கு உணர்ந்தவர்.

அரசனுடன் பழகி, அவனுக்கு அறிவுரை கூறும் அமைச்சரும் சான்றோரும் ஒழுக்கத்தில் சிறந்து, அரசனுக்கு நல்ல நெறி காட்டினால் யாவருக்கும் நலம் உண்டாகும். அரசன் தகாத வழியில் சென்றால், தம்முடைய ஒழுக்கச் சிறப்பாகிய பலத்தினால், அஞ்சாமல் அவனை இடித்துரைத்து நல்வழிப்படுத்த வேண்டும். இன்ன இன்ன துறையில் இறங்கினால் இன்ன இன்ன நலந் தீங்குகள் உண்டாகும் என்று அறிவினாலும் அநுபவத்தினாலும் ஆராய்ந்து உரைக்கவேண்டும்.

★

இத்தகைய இயல்புகளுடன் எல்லாரும் இருக்கிறார்களா? சில அவைக் களங்களில் அமைச்சர்கள் இருந்தார்கள். சான்றோர்கள் என்று பிறர் தம்மை மதிக்க வேண்டுமென்று வற்புறுத்தி மதிப்புப் பெறுபவர்களும் இருந்தார்கள். அரசன் எது சொன்னாலும், அதன் நன்மை

தீமையை ஆராயாமல், "ஆமாம்!" போடும் பொம்மை களாக வாழ்ந்தார்கள். இன்னும் சிலர் அரசனைத் தீய வழியில் புகுத்தி, அதனால் தாம் நன்மை பெற்றார்கள். அவர்கள் தமக்கு அரசனிடம் இருக்கும் செல்வாக்கினாலும் மிடுக்கினாலும் யாவரையும் அச்சுறுத்தி, அரசனை அணுக வொட்டாமல் செய்தார்கள்.

இவ்வாறு தாமும் ஒழுக்கம் பிறழ்ந்து அரசனையும் கெடுக்கும் 'சான்றோர்' பலரைப் பற்றிய செய்திகளை நரி வெரூஉத் தலையார் உணர்ந்தார். அவர்களுக்கு அறிவுரை கூறவேண்டும் என்று எண்ணினார். குறிப்பிட்டு யாரை யென்று கூறுவது? பொதுவாகவே கூறித் தமிழ் நாட்டு மக்களுக்கு அந்தப் பாடலை வழங்கினால், அரசரும் பிறரும் உண்மையை உணரட்டும் என்பது அவர் நினைவு. ஒரு கவி பாடினார். அந்தச் சான்றோர்களைப் பார்த்து, "ஐயன்மீர், நீங்கள் நாட்டுக்கு நல்லது ஒன்றும் செய்யாவிட்டாலும் தீங்கு செய்யாமல் சும்மா இருந்தாலே போதும்" என்று கூறுவதைப் போலப் பாடினார்.

"இப்போது உங்கள் மனம் போலத் தீங்குகளைச் செய்துவிட்டால் நாளைக்குக் காலன் வருவானே! 'நீங்கள் இன்ன இன்ன தீங்குகளைச் செய்யவில்லையா?' என்று கணக்குக் காட்டித் தன் கைப்பாசத்தை உங்கள் மேல் வீசுவானே! அப்போது நீங்கள், 'ஐயோ! நல்லது செய் யாமற் போனோமே!' என்று வருந்துவீர்கள். அதற்கு இடம் இல்லாமல் இப்போதே ஒழுங்காக இருங்கள். நல்லது செய்யும் ஆற்றல் உங்களுக்கு இல்லாவிட்டாலும், பொல்லாததைச் செய்வதை விட்டு விடுங்கள். இதனால் எல்லாருமே மகிழ்ச்சியை அடைவார்கள். உங்களுக்கு நல்ல வழியும் அதுதான்" என்ற பொருளை அமைத்துப் பாடினார்.

கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்குங் காலை இரங்குவிர் மாதோ !
நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே.

[கணிச்சி-மழு; ஒருவன்-காலன்; பிணிக்குங்காலை-பாசத்தால் கட்டும் பொழுது; இரங்குவிர்-வருந்துவீர்கள்; ஆற்றீராயினும்-முடியாதவர்களாயினும்; ஓம்புமின்-தவிருங்கள்; நல் ஆற்றுப் படூஉம்-நல்ல வழியே செல்லும்.]

சான்றோரைப் பார்த்துச் சொன்னார் புலவர். அவர்களை,

பல்சான் றீரே ! பல்சான் றீரே !
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுட்
பயன்இல் மூப்பிற் பல்சான் றீரே ![1]

என்று முதலில் விளித்து, பின்பே அந்த உபதேசத்தைச் சொல்கிறார்.

'பல் சான்றோர்களே !' என்பது, சான்றோர் என்ற பெயர் இருந்தும் அதன்படி ஒழுகாதவர் என்பதை அவர் எண்ணியிருப்பதைக் காட்டுகிறது. கயலின் சிறு முள்ளைப் போல் அவர்களுடைய கன்னங்களில் மயிர் நரைத்துத் தோன்றுகிறது. அதோடு தோலில் சுருக்கங்கள் விழுந்திருக்கின்றன. "இவ்வளவு வயசாகியும் பயன் இல்லாமல், தீங்கு புரிகிறீர்களே !" என்று இடித்துக் கூறுகிறார். "உங்களிடம் நரையும் திரையும் தோன்றி விட்டன. அரசனுக்கும் மக்களுக்கும் பயப்படாவிட்டாலும் நாளை வரும் காலனுக்கு அஞ்சவேண்டாமா ?" என்பதை நினைப்பூட்டுகிறார்.

★

1. புறநானூறு, 195.

நரையும் திரையும் மூப்புக்கு அறிகுறிகள். மூப்பு, மரணத்தின் தலைவாசல். உலகம் நிலையாதது, உடம்பு நிலையாதது என்று உணர்ந்த பெரியவர்கள் தம் உடம்பு வளமாக இருக்கும்போதே, "இந்த உடம்பு தளர்ந்து விடும்; நரை கூடிக் கிழப்பருவம் வந்துவிடும்" என்பதை முன்பே உணர்ந்து செய்ய வேண்டியவற்றைச் செய் வார்கள்.

> நரைவரும் என்றெண்ணி நல்லறி வாளர்
> குழவி யிடத்தே துறந்தார்[1]

என்று நாலடியார் கூறுகிறது.

அவர்கள் நரையை முன்பே எண்ணி நல்லது செய்பவர் கள். அவ்வளவு தகுதி இல்லாதவர்கள் சிலர் நரை வந்துவிட் டால், அதைக் கண்டு அஞ்சி நடுங்கி, "நமக்கு மூப்பு வந்து விட்டது. இதைத் தொடர்ந்து மரணமும் வந்துவிடும். ஆகையால், இப்போதே செய்ய வேண்டியதைச் செய்து முடிக்க வேண்டும்" என்று உறுதி கொள்வார்கள்.

★

பழைய காப்பியமாகிய வளையாபதியில் ஒரு பாட்டு உண்டு. நரையைத் தூது என்று சொல்கிறது அது. தூது என்றால் அது ஒரு செய்தியைச் சொல்லவேண்டும்; அதனை அனுப்பியவர் ஒருவர் இருக்கவேண்டும்.

நரையென்னும் தூதை அனுப்புகிறவன் கூற்றுவன். அவன், "இதோ நான் அணுகிக் கொண்டிருக்கிறேன். உன் வாழ்க்கை நிலையாது. அதற்குள் உன் ஆசையை அடக்கித் தவம் செய்வாயாக" என்று அந்தத் தூதுவனை விடுகிறான். நாற்பது வயசு கடந்தவுடனே இந்த நரைத் தூது வந்துவிடுகிறது. அதைக் கண்டு அறிவுடையவர்கள் தம் நிலையை உணர்ந்து கொள்கிறார்கள். 'வேல் போன்ற

1. நாலடியார், 11.

கண்களையுடைய பெண்களின் ஆசை நீங்கவும், நாம் விரும்பும் இடத்துக்கு நமக்குக் கண்போல இருந்து கைக் கோல் வழி காட்டவும், உயிரைநீக்கும் கூற்றுவன் அருகிலே வந்து நிற்கவும், நாற்பது பிராயம் கடந்து விட்டோம்; நரைத் தூது வந்துவிட்டது. இனி இளமை நில்லாது. ஆசையைத் துறந்து தவத்தை மேற்கொள்வதே துணிவு' என்று உறுதி பூணுகிறார்களாம்.

வேற்கண் மடவார் விழைவொழிய, யாம்விழையக்
கோற்கண் நெறிகாட்டக் கொல்கூற்று உழையதா,
நாற்ப திகந்தாம் ; நரைத்தூது வந்ததினி
நீத்தல் துணிவாம் ; நிலையா திளமையே.

[மடவார்-பெண்கள்; கோற்கண்-கோலாகிய கண்; நெறி-வழி; உழையதா - அருகில் இருப்பதாக; இகந்தாம் - கடந்துவிட்டோம்; நீத்தல் - ஆசையைத் துறத்தல்.]

★

தசரதன் ஒருநாள் கண்ணாடியில் பார்த்துக் கொண்டானும். அவன் காதடியில் ஒரு சிறு நரைமயிர் காட்சி அளித்ததாம். உடனே அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அறுபதினாயிரம் ஆண்டுகளாக அவன் ஊக்கம் சிறிதும் குறைவில்லாமல் அரசாண்டு வந்தான். இப்போது அந்த நரை மயிர் அவன் காதடியிலிருந்து காதோடு காதாக ஏதோ இரகசியத்தைச் சொல்லியது.

"தசரத மன்னனே, உனக்கு வயசாகிவிட்டது. இனி உயிர்க்கு உறுதி பயக்கும் வேலையில் நீ ஈடுபடவேண்டும். உலகத்தை உன் மகனாகிய இராமனுக்கு அளித்துவிட்டுச் சொல்வதற்கு அரிய தவத்தை நீ புரிவதற்கு ஏற்ற பருவம் இது" என்று காதடியிலே சொல்வதற்காகத் தூது வந்தது போல, மின்னலைப் போலக் கருமை நீங்கி வெளுத்து நின்றது ஒரு மயிர்.

மன்னனே அவனியை மகனுக்கு ஈந்துநீ
பன்னருந் தவம்புரி பருவம் ஈதுஎனக்
கன்னமூ லத்திலே கழற வந்தென
மின்னெனக் கருமைபோய் வெளுத்த தோர்மயிர்.

[கன்னமூலம் - காதின் அடி; கழற வந்தென - சொல்ல வந்தது போல.]

அந்த நரைமயிர் வேறு ஒரு விதமாகவும் காட்சி அளித்தது. தீங்கு செய்து உழலுகின்ற இராவணனுடைய பாவம் ஒரு நரை மயிராகத் தோன்றியதோ என்று எண்ணும்படி இருந்ததாம்.

தீங்குழல் இராவணன் செய்த பாவந்தான்
ஆங்கொரு நரையதாய் அணுகிற் றுமெனப்
பாங்கில்வந் திடுநரை படிமக் கண்ணடி
ஆங்கெதிர் கண்டனன் அவனி காவலன்.[1]

[தீங்கு உழல்; படிமக் கண்ணடி - உருவம் முழுவதையும் காட்டும் நிலைக் கண்ணடி; அவனி காவலன் - தசரத மன்னன்.]

அதைக் கண்ட பிறகே தசரதன் தான் தவம் செய்ய எண்ணி, இராமனுக்கு முடிசூட்ட நிச்சயிக்கிறான். கைகேயி இடைப் புகுந்து அவனை வனத்துக்கு ஓட்டுகிறாள். அங்கே இராவணன் சீதையை எடுத்துச் செல்லுகிறான். அதனால் இராமன் அவனைப் போரில் அழிக்கிறான். இவ்வளவுக்கும் மூலம் தசரதன் இராமனுக்கு முடி சூட்ட எண்ணியது. அந்த எண்ணத்துக்கு இந்த நரைக் காட்சி காரணமாயிற்று.

வாழ்க்கையில் எத்தனை துன்பம் வந்தாலும், இன்பம் வந்தாலும் உண்மையை மறந்து - வாழ்க்கை நிலையாமையை மறந்து - 'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்று வாழ்ந்தவர்களும் அறிந்துகொள்ளும்படி இயற்கையிலே

1. இந்த இரண்டு பாடல்களும் சில கம்பராமாயணச் சுவடிகளில் மாத்திரம் காணப்படுபவை.

நரை திரை மூப்புகள் வருகின்றன. அவை மரணத்தை முன்னே நின்று அறிவிக்கின்றன. அறிவுடையவர்கள் நரைத் தூது முதலியவற்றைக் கண்டு, செய்ய வேண்டியதைச் செய்கிறார்கள். அல்லாதவர்கள் நரையைக் கண்டும், திரையைக் கண்டும், மூப்பை உணர்ந்தும் சிறிதும் மனப்பாங்கு மாறுவதில்லை. அவர்களைப் பார்த்தே நரி வெரூஉத் தலையார்,

> நரைமுதிர் திரைகவுள்
> பயனில் மூப்பிற் பல்சான் றீரே!

என்று விளித்தார். நரைத் தூதை உணராமல் பயன் இல்லா வாழ்க்கையை உடையவர்கள் அவர்கள்.

# ஆவண ஓலை

பழங்காலத்தில் தமிழ் நாட்டில் ஓலைகளில் எழுதி வந்தார்கள் என்பது யாவரும் அறிந்தது. தமிழ் நூல்கள் யாவும் ஏட்டுச் சுவடிகளில் இருந்தன. ஓலையை வாரி, எழுத்தாணியால் எழுதும் வழக்கம் இளம் பருவத்தி லிருந்தே தமிழ் மக்களுக்கு அமைந்தது.

> வெண்பா இருகாலிற் கல்லானை வெள்ளோலை
> கண்பார்க்கக் கையால் எழுதானைப்—பெண்பாவி
> பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
> எற்றோமற் றெற்றோமற் றெற்று[1]

என்ற வெண்பா, ஓலையில் எழுதத் தெரியாத மகனை இழித்துக் கூறுகின்றது.

நூல்களை எழுதுவதோடு யாருக்கேனும் செய்தி எழுதி விடுப்பதற்கும் ஓலையையே பயன்படுத்தினார்கள். பல ஓலை களைக் கயிற்றாற் கோத்து வைத்ததற்குச் சுவடி யென்றும், தனி ஓலைக்கு ஓலை யென்றும் பெயர்கள் வழங்கின. பெரும் பாலும் ஒருவருக்கு மற்றொருவர் செய்தி அனுப்பும்போது ஓலைகளில் எழுதி விடுத்தமையால் திருமுகங்களுக்கு ஓலை என்பது காரணப் பெயராக அமைந்துவிட்டது. அரசர்கள் தம்முடைய கட்டளைகளை எழுதி அனுப்புவதற்கும் ஓலை களே பயன்பட்டன. அது சம்பந்தமான பணிபுரிபவ னுக்குத் திருமந்திர ஓலை என்ற பெயர் இருந்தது. புலவர்கள் கவியுருவில் முடங்கல் தீட்டினால் அதற்குச் சீட்டுக் கவி என்றும் ஓலைத் தூக்கு என்றும் பெயர்கள் வழங்கின.

---

1. ஔவையார் பாடல்.

மன்னுடை மன்றத்து ஓலைத் தூக்கினும்

என்று வரும் சூத்திரத்தில் ஓலைத் தூக்கு என்னும் தொடர் வருகிறது.

ஒருவர் ஒரு நிலத்தை மற்றொருவருக்கு விற்றாலும், கடன் வாங்கினாலும், வேறு ஏதேனும் ஒப்பந்தம் செய்து கொண்டாலும் அவற்றையும் ஓலைகளிலே எழுதி வந்தார்கள். அவ்வோலைகளுக்கு ஆவண ஓலை என்று பெயர். ஒவ்வோர் ஊரிலும் இத்தகைய ஆவணங்களை அவ்வூர்ச் சபையினர் ஓரிடத்தில் பாதுகாத்து வந்தனர். இக்காலத்தில் பத்திரங்களைப் பதிவு செய்யும் நிலையங்கள் அரசியலாருடைய ஆட்சியில் இருக்கின்றன அல்லவா? அவற்றைப் போல ஆவண ஓலைகளைக் காப்பில் வைத்து, வேண்டும் போது நோக்கும் வகையில் தருவதற்காகத் தனி இடம் இருந்தது. அதற்கு ஆவணக்களரி என்று பெயர்.

'ஆவணக் களரியே காப்பிட்டுக் கைச் செலவறக் கொண்டு விற்று' என்று திருப்புகலூரில் உள்ள கல்வெட்டு ஒன்றில் ஒரு செய்தி வருகிறது. ஆவண ஓலை எழுதிய பிறகு அதனை ஆவணக்களரியில் வைத்துக் காப்புச் செய்ததை அது குறிக்கிறது.

திருமுகமானாலும் ஆவணமானாலும் ஓலையை அப்படியே நீளமாக வைக்காமல் சுருட்டி அதன்மேல் முத்திரையிடுவது வழக்கம். இவ்வாறு சுருட்டுவதனால்தான் திருமுகத்துக்கு முடங்கல் என்ற பெயர் வந்தது.

★

சுந்தரமூர்த்தி நாயனார் வரலாற்றில் ஆவண ஓலையைப் பற்றிய செய்தி வருகிறது. முதியவராக எழுந்தருளி நாயனாரைத் தம் அடிமை என்று உரிமை கொண்டாடிய வெண்ணெய்நல்லூர்ப் பித்தர் தம் உரிமைக்கு ஆதாரமாக ஓர் ஓலையைக் காட்டினார்.

அக்காலமுன் தந்தைதன் தந்தைஆள் ஓலைஈதால்

என்று காட்டினார். அதைச் சுந்தரர் வலிதிற்பற்றிக் கிழித்து எறிந்துவிட்டார். உடனே முதிய அந்தணர், "இது படி ஓலைதான்; இதற்கு மூல ஓலையும் என்னிடம் இருக்கிறது. அதைச் சபையோர்முன் காட்டி நீ அடிமை என்பதைச் சாதிப்பேன்" என்று கூறித் திருவெண்ணெய் நல்லூரில் இருந்த சபைக்கு அவரை அழைத்துச் சென்றார்; அந்தச் சபையோர்முன் தம் வழக்கை எடுத்துரைத்தார்.

சபையினர், "நீர் இவரை அடிமை என்று சொல்வதற்கு ஏதேனும் ஆதாரம் உண்டா? ஆட்சி உண்டா? அல்லது ஆவண ஓலை இருக்கிறதா? அன்றி இதை வேறு யாரேனும் அறிவதற்குச் சாட்சி உண்டா?" என்று கேட்டனர். அப்போது, "இதோ ஆவண ஓலை இருக்கிறது" என்று முதியவர் கூறினார்.

அவையினர் அதனைக் கண்டனர். பின்பு அவர்களுடைய ஏவலின்படி ஊர்க்கரணத்தான் அந்த ஓலையைத் தொழுது வாங்கிச் சுருட்டி இருந்த அதன் மடிப்பை நீக்கிப் பார்த்து, அது பழமையான ஓலையே என்று தெளிந்து அதை வாசிக்கலானான்.

இருள்மறை மிடற்றோன் கையில்
ஓலைகண் டவையோர் ஏவ
அருள்பெறு கரணத் தானும்
ஆவணம் தொழுது வாங்கிச்
சுருள்பெறு மடியை நீக்கி
விரித்தனன், தொன்மை நோக்கித்
தெருள்பெறு சபையோர் கேட்ப
வாசகம் செப்பு கின்றான்[1]

என்று இச்செய்தியைச் சேக்கிழார் பாடுகிறார். ஆவண ஓலை சுருட்டி யிருந்ததென்பதை இச்செய்யுள் தெரிவிக்கிறது.

---

1. பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட, 58.

அந்த ஓலையில் சுந்தரருடைய பாட்டனுர், தாமும் தம் பரம்பரையினரும் வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு அடிமை என்று எழுதிக் கையெழுத்திட்டிருந்தார். அதோடு அதற்குச் சாட்சியாகப் பலர் மேலெழுத்திட்டிருந் தார்கள். அவற்றை யெல்லாம் கரணத்தான் வாசிக்கச் சபையிலிருந்த பெரியவர்கள் கேட்டார்கள். பின்பு, "இந்த எழுத்து உம்முடைய பாட்டனுர் எழுத்துத்தானு? பார்த்து அறியும்" என்று அவர்கள் சுந்தரரிடம் கூற, அவரை ஆட்கொள்ள வந்த வள்ளல், "இவனுடைய பாட்டனுர் கையெழுத்துள்ள வேறு ஏதேனும் இருந்தால் கொணர்ந்து நீங்களே ஒப்பு நோக்கிப் பார்த்துச் சொல் லுங்கள்" என்ருர்.

அதன்படியே அவையில் இருந்த மறையோர் சுந்தர ருடைய பாட்டனுர் எழுதிய ஓலையை ஆவணக் களரியி லிருந்து வருவித்து ஒப்புநோக்கிப் பார்க்க, இரண்டும் ஒத்திருந்ததைக் கண்டு, முதியவர் கூறுவது உண்மையே என்று ஒப்புக்கொண்டனர்.

> திரண்டமா மறையோர் தாமும்
> திருநாவ லூரர் கோமுன்
> மருண்டது தெளிய, மற்ற
> மறையவன் எழுத்தால் ஓலை
> அரண்தரு காப்பில் வேறுெருன்
> றழைத்துடன் ஒப்பு நோக்கி
> இரண்டும்ஒத் திருந்த தென்னே,
> இனிச்செயல் இல்லை என்ருர்.[1]

இதில் சுந்தரருடைய பாட்டனுர் தம் கையால் எழுதிய வேருேர் ஓலையை 'அரண்தரு காப்' பிலிருந்து வருவித்தார்கள் என்ற செய்தி வருகிறது. அந்த 'அரண் தரு காப்பு' என்பது ஆவணக் களரியைக் குறிக்கிறது.

1. பெரிய. தடுத்தாட்கொண்ட. 62.

"ஆவணக் களரியே காப்பிட்டு" என்ற கல்வெட்டு வாசகத்தால் இதனை உணரலாம்.

ஓலைகளைச் சுருளாக்கி அதன்மேற் பொறியிட்டு, ஆவணக் களரியில் பாதுகாத்தார்கள். அப்படி அப்படியே வைத்து விட்டால் பாதுகாப்பு ஆகாது. அவற்றைக் குடத்துக்குள் இட்டு, குடத்தின் வாயை மூடி இலச்சினையிட்டு வைத்தார்கள்.

ஊர்ச் சபைக்குத் தேர்தல் நடைபெறும்போது குடவோலை இடுதல் என்னும் முறை இருந்து வந்தது. இதனை உத்தரமேரூர் என்ற ஊரிலுள்ள கல்வெட்டு மிகத் தெளிவாகத் தெரிவிக்கின்றது. ஊரில் உள்ள பல்வேறு வாரியங்களுக்குரியவர்களைத் தெரிந்தெடுக்கக் குடவோலை முறையையே ஆண்டார்கள். குறிப்பிட்ட வாரியத்துக்குத் தகுதி உள்ளார் பெயர்களைத் தனித்தனியே ஓலைகளில் எழுதி ஒரு குடத்தில் போட்டுக் குலுக்கி இளம் பிள்ளை ஒருவனைக் கொண்டு ஒவ்வொன்றாக எடுக்கச் சொல்வார்கள். எத்தனை பேர் வேண்டுமோ அவ்வளவு ஓலை நறுக்குகளை எடுக்கச் சொல்வார்களாம்.[1] குடத்தில் இட்டு எடுப்பதனால் குடவோலை என்ற பெயர் வந்தது.

தேர்தல் சமயத்தில் குடத்தில் ஓலையிட்டு எடுப்பதோடு ஆவணங்களைப் பாதுகாப்பதற்கும் குடத்தைப் பயன்படுத்தினார்கள் என்றே தெரியவருகிறது. இலச்சினையிட்ட ஓலைச் சுருள்களைக் குடத்தில் இட்டு அதனை மூடிக் காப்பிட்டு ஆவணக் களரியில் பாதுகாத்து வந்தார்கள்.

★

கல்வெட்டுகளில் காணும் செய்திகளாலும் பெரிய புராணத்தாலும், ஆவணம், ஆவணக் களரி என்பவற்றைப் பற்றிய செய்திகள் தெரிய வருவதோடு சங்க காலத்துச்

1. The Colas by K.A. Nilakanta Sastry, p p. 284, 297.

செய்யுள் ஒன்றினாலும் அதுபற்றிய செய்தி தெரிகிறது. ஆவண ஓலைகளைக் குடத்திலிட்டுப் பாதுகாக்கும் வழக்கம் இந் நாட்டில் மிகப் பழங்காலத்திலிருந்தே வந்திருக்க வேண்டும் என்பதை அச்செய்யுளில் உள்ள குறிப்புக்கள் விளக்குகின்றன. அந்தச் செய்யுளைப் பார்க்கலாம்.

அகநானூற்றில் உள்ளது அது; மதுரையில் வாழ்ந்த பெரும் புலவராகிய மருதன் இளநாகனார் என்பவர் பாடியது. ஒரு தலைவன் தன் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் செல்ல எண்ணுகிறான். அவ்வாறு சென்றால் தலைவி வருந்துவாள் என்ற நினைப்பு வருகிறது. உடனே, 'இப்போது போகவேண்டாம்; பின்பு போகலாம்' என்று முடிவு செய்கிறான். அப்போது தன் நெஞ்சை நோக்கிக் கூறுவதாக அந்தப் பாடல் அமைந்திருக்கிறது. 'தலைமகன் பிரியக் கருதிய நெஞ்சிற்குச் சொல்லிச் செலவு அழுங்குவித்தது' என்னும் துறையில் அமைந்தது அச் செய்யுள்.

> நன்னுதல் பசப்பவும் ஆள்வினை தரீஇயர்
> துன்னருங் கானம் துன்னுதல் நன்றெனப்
> பின்னின்று சூழ்ந்தனை ஆயின்நன் றின்னா
> சூழ்ந்திசின் வாழிய நெஞ்சே![1]

என்று தொடங்குகிறது பாட்டு. "இவள் நம் பிரிவினால் பசலையை அடையவும் அதனைக் கருதாமல் நம் முயற்சியை நிறைவேற்றும் பொருட்டு, செல்வதற்கரிய பாலை நிலத்தின் வழியே சேர்தல் நல்லது என்று என்னை வழிபட்டு யோசனை கூறினை; ஆனால் நெஞ்சே, நீ மிகவும் இன்னாதவற்றைத் தேர்ந்து கூறினாய்" என்று தலைவன் சொல்கிறான்.

---

1. ஆள்வினை தரீஇயர் - முயற்சியை நிறைவேற்ற. பின்னின்று - வணங்கி. நன்று இன்னா - மிகவும் பொல்லாதவற்றை. சூழ்ந்திசின் - எண்ணினாய்.

அவன் போக வேண்டிய சுரம் அல்லது பாலை நிலம் 'துன்னருங் கானம்' என்பதைப் பின்பு விரித்துச் சொல்கிறான். அது குறிஞ்சி திரிந்து பாலையான நிலம். எங்கும் குண்டு குண்டாகக் கற்கள் கிடக்கின்றன. வழி இன்னதென்று தெளிவாகத் தெரியாது. முன்னாலே போன மக்கள் ஒருவழியாகப் போகாமையால் எல்லாம் கவர்த்த வழிகளாக இருக்கும். கல் நிரம்பிய வழிகள் அவை; கல் அதர்க் கவலை.

வழியின் கடுமை கிடக்கட்டும். அங்கே ஓரே வெப்பம். மழை என்ற பெயரே இல்லை. மழை பெய்த காலத்தில் அங்கங்கே மக்கள் வாழ்ந்திருந்தார்கள். இப்போது எல்லோரும் குடிபோய்விட்டார்கள். வெறும் பாழாகக் கிடக்கும் நிலப்பரப்பு அது.

அங்கே போர் நிகழ்ந்திருக்கிறது. மிகவும் துணிவுடன் பகைவரோடு போர் செய்து வீழ்ந்தார் பலர். அவர்களுடைய உடலங்கள் கிடக்கின்றன. அவற்றைக் கழுகுகளும் பருந்துகளும் கொத்துகின்றன. வயிற்றைக் கொத்திக் குடல்களை இழுத்து வெளியே போடுகின்றன.

......வெய்துற
இடியுமிழ் வானம் நீங்கி, யாங்கணும்
குடிபதிப் பெயர்ந்த சுட்டுடை முதுபாழ்.[1]

என்று பாலை நிலத்தின் இயல்பைத் தலைவன் சொல்லுகிறான்.

உயிர்திறம் பெயர நல்அமர்க் கடந்த
தறுகணாளர் குடர்தரீஇத் தெறுவரச்

1. வெய்துற - வெம்மை உண்டாக; குடிபதிப் பெயர்ந்த - குடிமக்கள் ஊரைவிட்டு ஓடிப்போன; சுட்டு உடை - பிறர் பழமையை எண்ணிச் சுட்டுதலை உடைய; முதுபாழ் - பழைய பாழான இடம்.

செஞ்செவி எருவை அஞ்சுவர இகுக்கும்
கல்லதர்க் கவலை.[1]

என்பது கழுகுகள் பிணங்களின் குடலைப் பிடுங்கும் செய்தியைச் சொல்லும் பகுதி.

கழுகுகளின் செயலுக்குப் புலவர் ஓர் உவமையைச் சொல்கிறார்.

கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்
பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்.[2]

'கயிற்றினாலே கட்டுதலை உடைய குடத்தில் உள்ள ஓலையைக் கைக்கொண்டவராகி அதில் உள்ள இலச்சினையை ஒப்பு நோக்கி அழித்துப் பார்க்கும் ஆவணக் களரியில் உள்ளவர்களைப் போல' என்பது இப்பகுதியின் பொருள். கழுகுகளுக்கு ஆவண மாக்களும், உடம்புக்குக் குடமும், குடலுக்கு ஆவண ஓலையும் உவமைகள்.

பழைய உரையாசிரியர் இங்கே, 'குழிசி-குடம், பொறி-இலச்சினை, ஆவண மாக்களின்-பிரமாணம் வாங்குகிற மாக்களைப் போல' என்று எழுதுகிறார். பிரமாணம் என்ற சொல்லுக்குச் சத்தியம் என்ற பொருள் இப்போது வழங்குகிறது. அதற்குச் சரியான பொருள் ஆதாரம், சான்று, அளவை என்பன. காட்சிப் பிரமாணம், அநுமானப் பிரமாணம் என்ற வழக்கினால் இதனை உணரலாம். ஒரு செய்திக்கு ஆதாரம் தேடி, குடத்தில் சேமித்து வைக்கப் பெற்ற ஆவணங்களை எடுத்து, அவற்றின் மேலுள்ள அடையாள முத்திரைகளை நீக்கிப் பிரித்துப் பார்க்கும் கரணத்தானைப் போன்றவர்களையே புலவர் நினைத்திருக்க

---

1. உயிர்திறம் பெயர - உயிர் தன் தன்மையினின்றும் மாறிச் செல்ல; அமர்க் கடந்த - போரை வென்ற; தரீஇ-வாங்கி; தெறுவர-சுழல; எருவை - கழுகு; இகுக்கும் - போடும்; கல் அதர்க்கவலை - கல்லை உடைய கவர்த்த வழி.

2. பிணி - கட்டு; குழிசி - குடம்; பொறி - அடையாளம்.

வேண்டும். சுந்தரர் வரலாற்றில், காப்பிலிருந்து கொணர்ந்த ஓலையைக் கரணத்தான் பிரித்துப் பார்த்த செய்தி வருவது இங்கே நினைப்பதற்குரியது.

> கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்
> பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்
> உயிர்திறம் பெயர நல்லமர்க் கடந்த
> தறுகணாளர் குடர்தரீஇத் தெறுவரச்
> செஞ்செவி யெருவை அஞ்சுவர இருக்கும்.[1]

என்று உவமையையும் பொருளையும் ஒருசேரப் பார்த்தால் ஆவண மாக்களின் செயல் நன்கு புலனாகும். எருவைகள் குடலைப் பிடுங்கி ஒவ்வொன்றாக வெளியே இடுகின்றன. ஆவணமாக்களும் ஒவ்வொன்றாகக் குடத்திலிருந்து ஓலையை வாங்கிப் பார்த்துப் போடுகிறார்கள்.

உவமையாக எடுத்தாளும் நிகழ்ச்சி பலரும் அறிந்த தாக இருப்பது இயல்பு. ஆதலின் ஆவணத்தை ஆராயும் செயல் பழந்தமிழ் நாட்டினருக்கு நன்றாகத் தெரிந்த தென்றே கொள்ளவேண்டும்.

ஆவண ஓலை எழுதுதலும், அதனைப் பாதுகாத்தலும், வேண்டும்பொழுது ஒப்புநோக்கிப் பார்ப்பதுமாகிய இந்தச் செய்திகளைக் கல்வெட்டுக்களிலிருந்து அறிவதோடு, பெரிய புராணம், அகநானூறு என்ற இலக்கியங்களிலிருந்தும் அறிய முடிகிறது. அவற்றால், தமிழர் வாழ்வில் நெடுங்கால மாக இத்தகைய நல்ல வழக்கங்கள் இருந்து வந்தன என் பதை உணர்கிறோம்.

---

1. அகநானூறு. 77.

# போரிலும் அறம்

நாகரிகம் முதிர முதிர மனிதனுக்கு அறிவு பெருகு கிறது. ஆனால் அன்பு பெருகுகிறது என்று சொல்ல இய லாது. ஊனுணவு கொள்ளும் காட்டு விலங்குகள் கூடி வாழ் வதில்லை. ஒன்றை ஒன்று அடித்துக்கொண்டு வாழ்கின்றன. இந்த விலங்குத் தன்மை மனிதனிடமும் இருக்கிறது. அவன் அறிவு விலங்குத் தன்மையைப் புதிய வகையில் பயன்படுத்திக்கொள்கிறது. பல்லாலும், நகத்தாலும் பகையை எதிர்த்துப் போரிடுவது விலங்கு. மனிதனோ படைக்கலங்களால் எதிர்த்துப் பொருகிறான். அவன் அறிவு வளர வளரப் பகையுணர்ச்சி குறைவதில்லை; படைக்கலங்கள் பெருகுகின்றன. இடப்பரப்பை வெல்ல வெல்ல, அவன் செய்யும் போர் உலகப் பெரும் போராக வளர்ந்து விடுகிறது. அவனுடைய விஞ்ஞான அறிவு அணுக்குண்டையும் நீர் வாயுக்குண்டையும் படைத்துப் போரைப் பயங்கரமாக்கிவிடுகிறது. இன்ன காலத்தில் இன்ன இடத்தில் போர் நிகழும் என்ற வரையறையையே இந்த நாகரிக காலத்துப் போர்கள் தகர்த்து விட்டன. யாருக்கும் யாருக்குமோ பகை. அதனால் போர் என்றால் அது அவர்களோடு நிற்பதில்லை. உலக முழுவதுமே பரவு கிறது. போர் வேண்டாத மக்களையும் இன்னலுக்குள் ஆழ்த்துகிறது. இது அறிவின் அடையாளம் என்று சொல்லலாமா?

பகை யுணர்ச்சி மனிதனிடமிருந்து போகவேண்டும் என்பது லட்சியம். உலகில் யாவரும் அந்தலட்சிய வாழ்வைக் கடைப்பிடிக்க இயலாது என்பது உண்மை. ஆனால் பகை யுடையவர்கள் லாப நஷ்டம் பெறுவது முறையாக இருக்க,

மற்றவர்களைப் போர் இடர்ப்படச் செய்யுமானால் அது முறையாகாது. பகையைப் போக்குவதற்கு முன் பகையின் விளைவாகிய போருக்கு வரையறை இருக்கவேண்டும்.

பழங்காலத்தில் மக்கள் போர் செய்தார்கள். அரசர்கள் படைகளையும் படைக்கலங்களையும் வைத்திருந்தார்கள். ஆனால் போர் விளைந்தால் அதற்கும் ஒரு வரையறை இருந்தது; நெறி முறை இருந்தது. யுத்த தர்மம் என்று சொன்னார்கள். அறப்போர் என்று சொல்வதற்கு ஏற்றபடி சில தடைகள் இருந்தன.

"போரிலே அறம் எங்கே வந்தது? போரே அறத்துக்கு மாறுயிற்றே" என்று லட்சியவாதி சொல்லலாம். நூறு தவறுகளைச் செய்பவனை எண்பது தவறுகளைச் செய்யும்படி செய்தால் அது நன்மையன்று என்று சொல்ல முடியுமா? போரே கூடாது என்றால் நடவாத காரியம். "போர் செய்கிறாயா? தொலைந்து போ; ஆனால் அதிலும் கட்டுப்பாடாக நடந்துகொள்" என்று பாரத நாட்டுப் பெருமக்கள் அறிவுறுத்தினார்கள்.

தமிழ் நாட்டில் இந்த வரையறை இலக்கிய இலக்கணங்களில் ஏறுமளவுக்குச் சிறப்புற்றிருந்தது. போரைப் பற்றிய பாடல்களுக்கு இலக்கணம் வகுப்பது புறப்பொருள் இலக்கணம். புறப்பொருளை ஏழு பகுதியாகப் பிரித்துச் சொல்லியிருக்கிறார்கள். பன்னிரண்டாகவும் பிரிப்பதுண்டு. ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பெயர் உண்டு.

போர் நிகழ்வதற்கு முன்னால் ஓர் அரசன் தான் போர் செய்யப்போகும் செய்தியைத் தன் நாட்டு மக்களுக்கும் பகைநாட்டு மக்களுக்கும் பறையறைவித்து அறிவிப்பான்.

"நாங்கள் போர் செய்யப்போகிறோம். வயசானவர்கள், பெரியவர்கள், பிள்ளை பெறுதவர்கள், பெண்கள், பசுக்கள் யாவரும் தங்கள் தங்களுக்குரிய பாதுகாப்பான இடங்களுக்குப் போய்விடட்டும்" என்று முரசறைவிப்

பான். அதைக் கேட்டு அவர்கள் பாதுகாப்பான இடத்துக்குப் போய்விடுவார்கள். இந்தச் செய்தியைத் தெரிந்து கொள்ளாத இயல்புடைய பசுமாடுகளை அரசனுடைய வீரர்கள் சென்று பிடித்துக்கொண்டு வந்துவிடுவார்கள். அதிலிருந்து சண்டை தொடங்கும். "சண்டைக்கு எடுபிடி மாடுபிடி" என்று தமிழில் ஒரு பழமொழி வழங்குகிறது. பாரத யுத்தம் நடப்பதற்கு முன் துரியோதனுதியர் விராட நகரத்துப் பசுக்களை ஓட்டி வந்தனர் என்றும், அருச்சுனன் அவற்றை மீட்டான் என்றும் பாரதம் சொல்லும் வரலாறு இந்த இலக்கணத்துக்கு இலக்கியம் போல நிற்கிறது.

இந்த 'மாடுபிடி'யைச் சொல்லும் பகுதி புறப் பொருளில் வெட்சித்திணை என்று பெயர் பெறும்.

> வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
> ஆதந் தோம்பல் மேவற் றுகும்[1]

என்று தொல்காப்பியம் அதன் இலக்கணத்தை வகுக்கின்றது. வேந்தனல் விடப்பட்டிருந்த படைத் தலைவர்கள் வேற்று நாட்டுக்குச் சென்று பகைவர் அறியாதவாறு அவர்களுடைய பசுக்களைக் கொண்டுவந்து பாதுகாப்பது பொருந்தியதாகும் என்பது இதன் பொருள். ஏன் பசுக்களைக் கொண்டு வரவேண்டும் என்பதற்குரிய காரணத்தை இச் சூத்திரத்துக்கு உரை எழுதிய நச்சினர்க்கினியர் விரிக்கிறார்.

> 'இரு பெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர் நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்கு செய்யாத சாதிகளை ஆண்டு நின்றும் அகற்றல் வேண்டிப் போதருகவெனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினல் தாமே கொண்டு வந்து பாதுகாத்தலும் தீதெனப்படாது அறமே யாம்'

என்பது அவர் விளக்கம்.

1. தொல். புறத்திணை, 2.

நெட்டிமையார் என்ற புலவர் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் அரசனைப் பாராட்டுகையில் இத்தகைய அறப்போரைப்பற்றிச் சொல்கிறார்:

> ஆவும், ஆனியற் பார்ப்பன மாக்களும்,
> பெண்டிரும், பிணியுடை யீரும், பேணித்
> தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
> பொன்போற் புதல்வர்ப் பெறூஅ தீரும்
> எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின்என
> அறத்தாறு நுவலும் பூட்கை மறம்[1]

என்பது அந்தப் பகுதி. 'அறத்தாறு நுவலும் பூட்கை மறம்' என்பதற்கு, 'அறத்தின் வழியே சொல்லும் கொள்கையையுடைய போர்' என்பது பொருள். போர் செய்தாலும் அதிலும் அறம் உண்டென்பதைக் குறிப்பது அது. பிறிதோரிடத்தில் போர் செய்யும் வேந்தரை, "அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்" என்கிறார் ஒரு புலவர்.

போர் செய்யும்பொழுதும் எதிர்ப்பட்ட படை வீரர்களை மனம் போனவாறே கொல்வது அறமன்று. சிலரைக் கொல்லாது விடுவதும் உண்டு. தொல்காப்பிய உரையில் நச்சினார்க்கினியர் ஓரிடத்தில் சிறப்புடை அரசியல், சிறப்பில்லாத அரசியல் என்று இரண்டாகப் பிரித்துச் சொல்கிறார். மதில்களை அமைத்து அவற்றில் கண்ணுக்குத் தெரியாத ஆயுதங்களை வைத்துப் பகைவர்மேல் அம்பு எய்வது போன்ற செயல்களை அதருமமான கலியுகத்தில் வந்த சிறப்பில்லாத வழிகள் என்று கூறுகிறார். பின்பு, 'சிறப்புடை அரசியலாவன: மடிந்த உள்ளத்தோனையும் மகப் பெறாதோனையும் மயிர் குலைந்தோனையும் அடி பிறக்கிட்டோனையும் பெண் பெயரோனையும் படையிழந்தோனை

---

1. புறநானூறு, 9.

யும் ஒத்த படை எடாதோனையும் பிறவும் இத் தன்மை யுடையோரையும் கொல்லாது விடுதலும், கூறிப் பொருத லும் முதலியனவாம்' என்று உரைக்கிறார்.

தழிஞ்சி என்பது ஒரு துறை. புறமுதுகு காட்டி ஓடும் பகைவன்மேல் படையை ஏவாமல் இருக்கும் செய்தியைச் சொல்வது அது. அதன் இலக்கணத்தை,

அழிகுநர் புறக்கொடை அயில்வாள் ஓச்சாக்
கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று[1]

என்று ஓர் இலக்கண நூல் சொல்கின்றது.

அங்கே புறமுதுகு காட்டுவோன்மேல் வாள் ஓச்சாத தைக் கழிதறுகண்மை என்று அச்சூத்திரம் கூறுகிறது. தறுகண்மை என்பது வீரம். கழிதறுகண்மை என்பது மிக்க வீரம். யாரையும் குண்டு போட்டு அழிப்பதே வீரம் என்று எண்ணும் இருபதாவது நூற்றாண்டு நாகரிக உலகத்திற்கு இந்தக் கழிதறுகண்மை விளங்காது.

இராவணன் இராமனோடு போர் செய்து ஓய்ந்து போனான். தன் தேர், படை யாவற்றையும் இழந்து தனிய னாக நிற்கிறான். அப்போது இராமன் ஓர் அம்பை விட்டு அவனைக் கொன்றிருக்கலாம். ஆனால் நிராயுதபாணியாக நிற்கும் அவனைக் கொல்வது அறமன்று. அறத்தை நிலை நிறுத்த வந்த இராமன் அறமல்லாத செயலைச் செய்யலாமா? ஆகவே அவன் அந்த அரக்கனை நோக்கி, "இன்று போய் நாளை வா" என்றான். இது தழிஞ்சி என்ற துறையின் பாற்படும். கம்பர் இந்தச் செய்தியை அழகாகச் சொல்கிறார்.

ஆள யாவுனக் கமைந்தன மாருதம் அறைந்த
பூளை ஆயினகண்டனை; இன்றுபோய்ப் போர்க்கு

1. புறப்பொருள் வெண்பா மாலை, 55.

நாளைவாவென நல்கினன், நாகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்.[1]

புறங்காட்டிஞரோடு பொருவது அறமன்று என்பதை இராமாயணத்தில் வேறு ஓரிடத்தில் குறிப்பாகக் காண்கிறோம். இராவணன் இராமனது அம்பினுல் வீழ்ந்து உயிரிழக்கிறான். பிணமாக வீழ்ந்து கிடக்கும் அரக்கனை இராமன் வந்து பார்க்கிறான். அவன் முதுகில் புண் இருக்கிறது. அதைப் பார்த்தவுடன் இராமனுக்கு வருத்தம் உண்டாகிறது. "இவன் முதுகுகாட்ட அம் முதுகின்மேல் நான் அம்பு விட்டுவிட்டேனே!" என்ற ஐயம் எழவே, "போயிற்று என் வீரம்!" என்று புழுங்குகிறான். அப்போது விபீஷணன் உண்மையை உரைக்கிறான்.

"முன் காலத்தில் இராவணன் திக்கயங்களோடு போரிட்டபோது அவற்றின் கொம்புகள் இவன் மார்பிலே குத்தி முதுகில் வந்து புறப்பட்டன. அவற்றை அப்படியே வைத்து இழைத்துவிட்டான். அந்தச் சுவடு இது" என்று விளக்கின பிறகே இராமன் ஆறுதல் பெறுகிறான்.

நாடுள தனையும் ஓடி
நண்ணலர்க் காண்கி லாமல்
பீடுள குன்றம் போலும்
பெருந்திசை எல்லை யானைக்
கோடுள தனையும் புக்குக்
கொடும்புறத் தழுந்து புண்ணின்
பாடுள தன்றித் தெவ்வர்
படைக்கலம் பட்டென் செய்யும்[2]

என்று விபீஷணன் சொல்வதாகக் கம்பர் பாடுகிறார்.

---

1. கம்ப. முதற் போர். 256. மாருதம் - காற்று; நாகு இளங் கமுகு - மிக இளைய கமுக மரம்.

2. கம்ப. இராவணன் வதை. 212. தனையும் - அளவும்; நண்ணலர் - பகைவரை; புறத்து - முதுகில்; தெவ்வர் - பகைவர்.

தமிழ் நூல்களிலும் பாரத நாட்டுப் பிறமொழி இலக்கியங்களிலும் போரிலும் அறம் திகழ்ந்தது என்ற கருத்தைப் புலப்படுத்தும் இடங்கள் பல.

''மனிதன் பகையை வளர்க்காமல் இருப்பது நல்லது. எல்லோரும் அவ்வாறு செய்ய இயலாவிட்டாலும் பகை மூண்டு போர் செய்யும்போது அதற்கும் சில வரையறையோடு போரிடுவது அடுத்தபடி நல்லது'' என்ற சிறந்த அநுபவபூர்வமான கொள்கையை உடையது பாரத நாடு என்பதை மேலே சொன்ன செய்திகள் விளக்கும்.

# மடங்கிய விரல்

இராமாயணம், பாரதம் என்ற இரண்டு இதிகாசங்களும் பாரத நாட்டில் மூலை முடுக்குகளில் எல்லாம் பரவியிருக்கின்றன. வால்மீகியின் இராமாயணத்திலும், வியாசருடைய பாரதத்திலும் இல்லாத பல கதைகள் அங்கங்கே வழங்குகின்றன. அவற்றில் ஒன்று வருமாறு.

துரியோதனன் போர்க்களத்தில் வீழ்ந்து கிடந்தான். அவனைப் பஞ்சபாண்டவரும், கண்ணனும் பார்த்துக் கொண்டு நின்றார்கள். உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. அவனுடைய வலக்கை விரல்கள் ஐந்தும் மடங்கி இருந்தன. அதனைக் கண்ட தருமபுத்திரர், "இவ்வாறு இருப்பது வியப்பாக இருக்கிறதே! இறக்கிறவர்களுக்கு ஏதேனும் மனக் குறை இருந்தால் கை விரல் மடங்கியிருக்கும் என்று சொல்வார்கள். துரியோதனனுக்கு என்ன மனக் குறையோ, தெரியவில்லையே!" என்று வருத்தத்தோடு கூறினார்.

அப்போது சகாதேவன், "இவனுக்கு ஐந்து குறைகள் மனத்தில் இருந்தன. தான் நினைத்தபடி அந்த ஐந்தும் நிறைவேறியிருந்தால் தனக்கே வெற்றி கிடைத்திருக்கும் என்று இவன் எண்ணினான். அவை நிறைவேறாத ஏக்கத்தால் ஐந்து விரல்களும் மடங்கியிருக்கின்றன; உயிர் போகவில்லை" என்றான்.

உடனே தருமபுத்திரர், "அந்தக் குறைகள் யாவை?" என்று கேட்டார்.

சகாதேவன் சொல்லலானான்: "கண்ணபிரான் தூது சென்றபோது அவருக்கு விருந்தளித்ததற்காக விதுரனைத் துரியோதனன் கோபித்துக்கொண்டான். அதனால், விதுரன் தன் வில்லை முறித்தெறிந்தான். அப்படிச் செய்யாமல் இருந்தால் இவனுடைய பங்கில் பலம் அதிகமாகி யிருக்கும். இது முதல் குறை" என்றான்.

"ஆம்; அது பெரிய குறைதான். அடுத்த குறை என்ன?" என்று கேட்டார் தருமர்.

"கண்ணபிரானுடைய சூழ்ச்சியால் துரியோதனனுக்கு அசுவத்தாமனிடம் ஐயம் உண்டாயிற்று. அவனுக்குப் படைத் தலைமை நல்கவில்லை. அசுவத்தாமன் சேனாதிபதி யாகியிருந்தால் துரியோதனனுக்கு வெற்றி கிடைத்திருக்கும். அப்படி நடவாதது இரண்டாவது குறை."

"அதுவும் உண்மைதான். அசுவத்தாமன் சேனாபதி யாகியிருந்தால் நம்முடைய படை வலிமைக்குப் பெரிய சோதனையாகவே இருந்திருக்கும். அது பெருங் குறை என்பதில் ஐயமே இல்லை" என்றார் தருமபுத்திரர்.

"நம்முடைய அன்னைக்குக் கொடுத்த வரத்தினால் கர்ணன் இரண்டாவது முறை நாகாஸ்திரத்தை விட வில்லை. அப்படி விட்டிருந்தால் அருச்சுனன் உயிர் தப்புவது அரிதாகியிருக்கும். இது மூன்றாவது குறை."

தருமபுத்திரர் அருச்சுனனைக் கருணைப் பார்வையோடு பார்த்தார். அவன் தலையைக் குனிந்து கொண்டான். மேலும் சகாதேவன் சொல்லலானான்.

"களப்பலிக்கு முகூர்த்தம் குறித்து அராவானையும் உடன்படச் செய்திருந்தார்கள் துரியோதனனைச் சேர்ந்தவர்கள். ஆனால், கண்ணபிரான் அமாவாசைக்கு முதல் நாளே சூரியனையும் சந்திரனையும் ஒருங்கே வரச் செய்து அமாவாசையை உண்டாக்கி, அராவானுடைய உறுப்பு

களைக் களப்பலியாகக் கொய்யச் செய்துவிட்டார். அப்படிச் செய்யாமல், முதற் பலியாக அராவான் கௌரவர்களுக்குக் கிடைத்திருந்தால் துரியோதனனுக்கு வெற்றி கிடைத் திருக்கும். அது மாறியது நாலாவது குறை."

"நீ சொன்னவை யெல்லாம் சரியான குறைகளே. கடைசிக் குறை என்ன? அதையும் சொல்லிவிடு" என்று தருமர் ஆவலுடன் கேட்டார்.

"துரியோதனன் பதினெட்டாம் நாள் யுத்தத்தில் திடீரென்று ஒருவரும் அறியாமல், இந்த வாவியில் புகுந்து நீர்த் தம்பனம் செய்து, ஒரு மந்திரத்தை உருவேற்றத் தொடங்கினான். அது பலித்திருந்தால் இறந்திருந்த அத்தனை பேரையும் எழுப்பியிருப்பான். ஆனால், இடை யில் வீமன் இங்கே வந்து அவனை அறைகூவி அழைத் தான். துரியோதனன் மானம் தாங்காமல் மந்திரத்தைப் பாதியிலே விட்டுவிட்டு வந்தான். நீர்த் தம்பன மந்திரம் நிறைவேறாததே ஐந்தாவது குறை" என்று சொல்லி முடித் தான் சகாதேவன்.

தருமர் அதைக் கேட்ட பிறகு, "எல்லாம் இந்தப் பெருமானுடைய திருவருளால் நமக்குக் கிடைத்த பேறு" என்று சொல்லிக் கண்ணபிரானைப் பார்த்தார்.

கண்ணன் முறுவல் செய்தான்.

"இவன் சொல்வதைக் கேட்டாயா?" என்று தரும புத்திரர் கண்ணனைக் கேட்டார்.

"கேட்டேன், இந்த ஐந்து குறைகள் காரணமாக இவன் கை விரல்கள் மடங்கியிருந்தால் அவ்வாறு இருத்தல் தவறு என்று சொல்வேன்" என்றான் கண்ணன்.

"ஏன்?" என்று தருமர் கேட்டார்.

"அவன் நினைத்தபடியே அந்த ஐந்து குறைகளும் இன்றி, அவை நிறைவேறியிருந்தாலும் துரியோதனன் வென்றிருக்க முடியாது. அந்த ஐந்துக்கும் மாறாக ஐந்து வேறு காரியங்கள் நிகழ்ந்திருக்கும். அப்போது ஐந்து பலமும் துரியோதனனுக்குப் பயனின்றி ஒழியும்" என்றான் கண்ணன்.

"ஐந்து நிகழ்ச்சிகளா? அவை யாவை?" என்று தரும புத்திரர் கேட்கக் கண்ணன் திருவாய் மலர்ந்தருளலானான்.

"விதுரன் வில் முறியாமல் இருந்திருந்தால் நீ யானையின்மேல் ஏறிப் போர் செய்வாய். உன் எதிரே விதுரனால் நிற்க முடியாது" என்றான் கண்ணன். இதைச் சொன்னவுடனே துரியோதனனுடைய மடங்கிய விரல்களில் ஒன்று நிமிர்ந்துகொண்டது. அது கண்டு யாவரும் வியந்தார்கள். மேலும் கண்ணன் கூறத் தொடங்கினான்.

"இரண்டாவது, அசுவத்தாமா படைத் தலைவன் ஆகியிருந்தால், நான் சக்ராயுதத்தை ஏந்திப் போர் செய்வேன். கர்ணன் இரண்டாம் முறை நாகாஸ்திரத்தை விட்டிருந்தால் அருச்சுனன் தன்னிடத்திலிருந்த பாசுபதாஸ்திரத்தை விட்டிருப்பான். அதை அவன் எய்ய வாய்ப்புக் கிடைக்கவில்லை."

எல்லோரும் கண்ணன் கூறுவதை ஆர்வத்தோடு கேட்டுக்கொண்டிருந்தார்கள். ஒவ்வொன்றுக்கும் மாற்றுக் கூறக் கூறத் துரியோதனன் விரல்கள் ஒவ்வொன்றாக நிமிர்ந்தன.

"அராவானை அவர்கள் முதற் பலியாகத் தந்திருந்தால் வீமன் மற்றச் சமயங்களிலும் தன் கதாயுதத்தை வீசி வெற்றி கொண்டிருப்பான். துரியோதனனுடைய நீர்த் தம்பனம் நிறைவேறியிருந்தால் நகுலன் வாளெடுத்துப் போர் புரிவான். அதனால் உயிர் துறந்து மீட்டும் எழுந்தவர்கள் மாள்வார்கள்" என்று மாயன் கூறி முடிக்கவே,

துரியோதனன் கைவிரல்கள் யாவும் நிமிர்ந்துவிட்டன. அவன் உயிரும் போய்விட்டது. பாண்டவர்கள் கண்ணனைத் துதித்து வழிபட்டனர்.

இந்தச் செய்தியைப் பின் வரும் பாடல்கள் தெரிவிக்கின்றன.

விதுரன்வில் முறித லாலும்
முனிமகன் காவா தாலும்
கதிர்மகன் இருகால் பாம்பைக்
கைவிடா திருத்த லாலும்
முதிர்களப் பலியி னாலும்
முழுகுநீர்த் தம்பத் தாலும்
இதுவைந்தும் மறக்க லாலே
இவனுயிர் இழத்தல் இன்றே.

[முனிமகன் - அசுவத்தாமா; கதிர்மகன் - கண்ணன்; பாம்பு - நாகாஸ்திரம்; களப்பலி - அராவானை இட்ட பலி; நீர்த்தம்பம் - துரியோதனன் செய்த ஜலத் தம்பனம். இது சகாதேவன் கூற்று.]

விதுரன்வில் நிற்கு மாயின்
மெய்வல்லான் யானை ஏறும்;
அதிர்பெறும் யுத்தம் தன்னில்
அசுவத்தா மாவே காத்தால்
எதிர்நிற்கும் யானே என்கை
ஆழியை எடுப்பேன்; கர்ணன்
முதிரும்பாம் பதனைத் தொட்டால்
முக்கண்ணன் படையால் தீரும்.

[மெய்வல்லான் - தருமன்; ஆழி - சக்ராயுதம்; பாம்பு - நாகாஸ்திரம்; முக்கண்ணன் படை - பாசுபதாஸ்திரம்; தொட்டால் - ஏவினால். இது கண்ணன் கூற்று.]

செங்களப் பலிஈந் துற்றால்
திறல்வீமன் தண்டே கொல்லும்;
அங்கவன் நீர்த்தம் பத்தால்
அயன்விஞ்சை பூர்த்தி யாகில்

பொங்கிய நகுலன் வாளால்
　　பொடிபடப் போகும் - என்ன
அங்கவன் விரல்ஒன் ருக
　　ஆவியும் விட்ட தன்றே.

[தண்டு - கதாயுதம்; அயன் விஞ்சை - பிரம்ம தேவனின் மந்திரம்.]

இந்தப் பாடல்கள் தனியே வாய்மொழியாக வழங்கு கின்றன. இவை நல்ல நடையில் இலக்கண வழுவின்றி அமையவில்லை. ஆயினும், இந்நாட்டில் வழங்கும் கதையைத் தம்முள்ளே பொதிந்து வைத்திருக்கின்றன.[1]

★

தமக்கு எவையேனும் குறைகள் இருப்பின் இறந்து போகும்போது கை விரல்கள் மடங்கி யிருக்கும் என்ற உண்மையை வேறு ஒரு வரலாறும் தெரிவிக்கிறது. ஸ்ரீ வைஷ்ணவ ஞாசிரிய பரம்பரையைச் சேர்ந்த ஆளவந்தா ருடைய வரலாற்றில் இந் நிகழ்ச்சி வருகிறது.

வைஷ்ணவ ஆசாரியராகிய ஸ்ரீ இராமாநுசர் துறவி யாவதற்கு முன் இளையாழ்வார் என்ற திருநாமத்தோடு இருந்தார். அவருக்கு ஆளவந்தாரைத் தரிசனம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது. அதன் பொருட்டுப் பெரிய நம்பியுடன் சென்றபோது, ஆளவந்தார் பரமபதத்துக்கு எழுந்தருளிவிட்டார் என்ற செய்தி தெரிந் தது. அந்த நிகழ்ச்சி அப்போதுதான் நடந்தது; ஆதலின், அவருடைய திருவுருவத்தையேனும் தரிசித்துக்கொள்ள லாம் என்று இளையாழ்வார் போனர். போய் ஆளவந்தா ருடைய திருமேனி முழுவதையும் பேராவலுடன் பார்த்

[1] இப் பாடல்களை எனக்கு அருள் கூர்ந்து தெரிவித்தவர்கள் வடகுமரையில் இருக்கும் துறவியாகிய ஸ்ரீலஸ்ரீ அப்பண்ண சுவாமிகள் அவர்கள்.

தார். அப்போது அவர் திருக்கரத்தில் மூன்று விரல்கள் மடங்கியிருப்பதைக் கண்டு, அது இயற்கையோ என்று அருகில் உள்ளவரை விசாரித்தார். இயல்பன்று என்பது தெரிந்து, "இவர்களுக்கு எவையேனும் குறைகள் உண்டோ?" என்று கேட்டார். "ஒன்றும் இருந்ததாகத் தெரியவில்லை" என்று சிலர் கூறினர்.

ஆளவந்தாருடன் இருந்து காலட்சேபம் கேட்டு வந்த மாணுக்கர்களிடம், "அவர்கள் திருவாக்கிலிருந்து அவர்களுக்கு நிறைவேற்ற வேண்டிய காரியங்கள் எவையேனும் இருந்ததாகத் தெரிந்தனவா?" என்று கேட்டார்.

அவர்கள், "வியாசர் இயற்றிய பிரம்மசூத்திரத்திற்கு ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்துக்கு இசைய ஒரு வியாக்கியானம் வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருப்பார்கள். வியாசர், பராசரர் என்னும் இருவருக்கும் நன்றியறிவைத் தெரிவிக்க ஏதேனும் செய்யவேண்டும் என்றும் கூறியதுண்டு. நம்மாழ்வாரிடத்தில் பேரன்புடையவராக இருந்தவர்; அவருடைய நினைவாக ஏதேனும் செய்யவேண்டும் என்ற ஆவலும் இருந்திருத்தல் கூடும்" என்றார்கள்.

இதைக் கேட்ட இளையாழ்வார்; "பெருமாளுடைய திருவருள் துணை இருந்தால் இந்த மூன்று குறைகளையும் தீர்க்க முயல்வேன்" என்று அங்கே உறுதி பூண்டார். பூண்டவுடனே ஆளவந்தார் கையில் மடங்கியிருந்த விரல்கள் நிமிர்ந்துவிட்டன. அது கண்டு யாவரும் வியந்தனர். "ஆளவந்தார் செய்து வந்த ஸ்ரீ வைஷ்ணவ சமயத் திருத்தொண்டை ஏற்றுக்கொள்ளத் தாங்களே தக்கவர்கள்" என்று அனைவரும் கூறி இளையாழ்வாரைப் பாராட்டினர்.

அன்று கூறிய உறுதி மொழியை ஸ்ரீ இராமாநுசர் பின்பு நிறைவேற்றினர். பிரம்ம சூத்திரத்திற்கு ஒரு பாஷ்யம் இயற்றியதாலும், கூரத்தாழ்வாருடைய குழந்தை

களுக்குப் பராசரபட்டர், வேத வியாச பட்டர் என்ற திருநாமங்களைச் சூட்டியதாலும், எம்பாருடைய தம்பி யான கோவிந்தப் பெருமாளின் குமாரருக்குப் பராங்குச நம்பி என்று நம்மாழ்வார் திருநாமத்தைச் சூட்டியதாலும் ஆளவந்தாருக்கு இருந்த மூன்று மனக் குறைகளையும் தீர்த்துவிட்டார்.

இந்த வரலாறு குரு பரம்பரையில் வருகிறது.

மனக்குறையுள்ளாருக்கு உயிர்விடும் சமயத்தில் கை விரல்கள் மடங்கியிருக்கும் என்ற செய்திக்கு உதாரணங்க ளாக இந்த இரண்டு வரலாறுகளும் தமிழ் நாட்டில் வெவ் வேறு இடங்களில் வழங்குகின்றன.

# விரல் வைத்தது

ஒரு நாள் தனிப் பாடல்களைப் படித்துக்கொண்டே இருந்தேன். பெரு நூல்களைப் படித்தால், தொடர்ந்து படித்தால்தான் சுவையை நன்கு உணரலாம். அப்படி யின்றித் தனித்தனியாக உள்ள பாடல்கள் சிறு நேரங் களில் படித்து இன்புறத் தக்கவை. ஓய்ந்த நேரத்தில் வேர்க்கடலையைக் கொறித்துக்கொண்டிருப்பது போலத் தனிப் பாடல்களை அநுபவிக்கலாம்.

ஒரு பாட்டில் சற்றே நின்றேன். மிகவும் சுவை உள்ளதாக இருந்தாலும் மீட்டும் படித்து இன்புற வேண் டும். பொருள் தெளிவாகாமல் இருந்தாலும் ஒரு முறைக் குப் பல முறை படித்துப் படித்துப் பொருள் காணவேண் டும். அந்தப் பாட்டு இரண்டாம் வகையைச் சேர்ந்தது ; எளிதிலே பொருள் புலப்படவில்லை. பாட்டு அறத்தைப் பற்றிச் சொல்வது என்பது மாத்திரம் தெரிந்தது. பதிப் பாசிரியர் பல இடங்களில் உள்ள தனிப் பாடல்களைத் தொகுத்து வகைப் படுத்தி இந்த நூலைப் பதிப்பித்திருக் கிறார். பெரும் புலவராகிய திரு மு. இராகவையங்கார் அவர்கள் நெடுநாள் உழைத்துத் தொகுத்துத் தமிழருக்கு வழங்கியிருக்கும் 'பெருந்தொகை' என்னும் நூலில்தான் அந்தப் பாட்டு இருக்கிறது. 'அறவியல்' என்னும் பகுதி யிலே அந்தப் பாட்டை அமைத்திருக்கிறார். ஆதலின் பாட் டின் கருத்து அறத்தைப் பற்றியது என்று தெரிந்துகொள் வது எளிதாயிற்று. பாட்டைப் படித்துப் பார்த்தேன்.

துற்றன வாகத் தொகுத்து விரல்வைத்த
தெற்றுக்கஃ தென்னி னிதுவதன் காரணம்

அற்றமி றுன மெனைப்பல வாயினுந்
துற்றவி ழொவ்வாத் துணிவென்னு மாறே.

இதுதான் அந்தப் பாட்டு. மூன்றாவது அடியில் 'அற்றமில் தானம்' என்ற தொடர் வருவதனால் இது தானத்தைப் பற்றியது என்று அறிய முடியும்.

பாட்டின் பொருள் தெளிவாக விளங்கவில்லை. 'இந்தப் பாட்டை எவ்விடத்திலிருந்து பதிப்பாசிரியர் எடுத்தார்?' என்ற எண்ணம் வந்தது. பழைய உரைகளில் மேற்கோளாக வரும் பாடல்களையும், சிலாசாசனப் பாடல்களையும், தனிப் பாடல் திரட்டில் உள்ள பாடல்களையும், ஏட்டுச் சுவடி களில் விடுதியாகக் கண்ட பாடல்களையும், இவைபோன்ற வேறு பல பாடல்களையும் பதிப்பாசிரியர் தொகுத்துப் பதிப் பித்திருக்கிறார். அடிக்குறிப்பில் 'இன்ன பாடல் இன்ன இடத்தில் இருப்பது' என்ற செய்தியைக் குறித்திருக்கிறார். ஆதலின் இந்தப் பாட்டைப் பற்றித் தெரிந்துகொள்ள அடிக்குறிப்பைப் பார்த்தேன். இது வளையாபதியில் உள்ள பாட்டென்று தெரிந்தது.

ஐம்பெரும் காப்பியங்கள் என்று வழங்கும் நூல்களில் ஒன்று வளையாபதி. அது இப்போது கிடைக்கவில்லை. ஆயினும் அதில் உள்ள பாடல்கள் பலவற்றைப் புறத் திரட்டில் காணலாம். அடிக்குறிப்பில் வளையாபதி என்ப தோடு, புறத்திரட்டில் கண்டது என்பதையும் புலப் படுத்தி யிருக்கிறார் பதிப்பாசிரியர்.

புறத்திரட்டைப் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை யவர்கள் மிக அழகாகப் பதிப்பித்திருக்கிறார். அதில் பாட்டு எப்படி யிருக்கிறது என்பதைப் பார்த்தேன். அறத்துப் பாலில் 23-ஆம் அதிகாரமாகிய 'தானம்' என்ப தில் இந்தப் பாட்டு இருந்தது. புறத்திரட்டில் 215-ஆவது பாட்டு இது.

அங்கே, "துற்றுளவாகத் தொகுத்து விரல் வைத்த" என்று முதலடியில் பாட பேதம் இருந்தது. அடியில் 'துற்றன, துற்றள' என்ற வேறு பாடங்களைத் திருவையா புரிப் பிள்ளையவர்கள் காட்டி யிருக்கிறார்.

'தானம்' என்ற அதிகாரத்தில் இந்தப் பாட்டை அமைத்திருப்பதால், இது ஏதோ தான சம்பந்தமாகச் சொல்வது என்று தெரிந்துகொண்டேன்.

பெருந்தொகையின் இறுதியில் அதன் பதிப்பாசிரியர் குறிப்புரை ஒன்றை எழுதி யிருக்கிறார். அதில் இந்தப் பாட்டுக்குரிய குறிப்பைப் பார்த்தேன். அங்கே, 'துற்றன வாக - அநுபவித்தவை போல; விரல் வைத்தது - எண்ணிக் கணக்கிட்டது; தானங்கள் எவ்வளவும், ஓரவிழுக்கு ஈடாகா என்பது, அவ்வுலோபர் துணிவு என்பது கருத்து' என்ற குறிப்புரையைக் கண்டேன்.

இந்தப் பாடல், உலோபர்கள் கூறும் கூற்றாக அமைந்தது என்று பதிப்பாசிரியர் எண்ணி யிருக்கவேண்டும். அவர்கள் ஒவ்வொன்றாக எண்ணி வந்து, இதுதான் துணிவு என்று சொன்னதாக அப்புலவர் கொண்டனர் போலும்.

அந்தக் குறிப்புரையும் எனக்குத் தெளிவை உண்டாக்கவில்லை. மறுபடியும் பாடலைத் திருப்பிப் படித்தேன். இந்தப் பாட்டில் முதலில் ஒரு வினா இருக்கிறது; பின் அதற்கு விடை இருக்கிறது. அந்த வினா, ஏதோ ஒரு செயலுக்குக் காரணம் யாது என்று கேட்பது போல இருக்கிறது. "தொகுத்து விரல் வைத்தது எற்றுக்கு?" என்ற வினா இந்தப் பாட்டில் இருக்கிறது. விரல் வைத்தது என்பதற்கு விரல்விட்டு எண்ணுவது என்று ஸ்ரீ ஐயங்கார் அவர்கள் உரை கொண்டார். விரல் விடுவது என்றால் எண்ணுதல் என்று சொல்லலாம். விரல் வைத்தது என்று பாட்டில் இருக்கிறது. ஏதோ ஓரிடத்தில் விரலை வைத்தி

ருக்க வேண்டும். 'தொகுத்து விரல் வைத்தது' என்றமை யால் எல்லா விரல்களையும் சேர்த்து வைத்திருக்கவேண்டும். அப்படி ஒருவர் வைத்தபோது, "ஏன் அப்படி வைக்கிறீர்?" என்று மற்ஞெருருவர் கேட்க, முன்னையவர் அதற்கு விடை கூறி யிருக்கவேண்டும். அந்த விடையே இந்தப் பாட்டு.— இவ்வாறு சற்றே ஆராய்ச்சியில் தலைப்பட்டேன்.

விடைப் பகுதியில் உள்ளம் சென்றது. "எற்றுக்கு அஃது?" என்ற கேள்விக்கு விடை ஆதலால், "இது அதன் காரணம்" என்று அது தொடங்குகிறது. பின் இரண்டடி, விரல் வைத்த செயலுக்குக் காரணம் இன்ன தென்று புலப்படுத்த வேண்டும். பின் அடிகளை ஆழ்ந்து படித்தேன்.

அற்றமில் தானம் எனைப்பல ஆயினும்
துற்றவிழ் ஒவ்வாத் துணிவென்னு மாறே.

'தானம் எத்தனையோ பல ஆனாலும் இதனை அவை ஒவ்வா; இது துணிவு என்பதை விளக்கும் வழி இது' என்று ஒருவாறு பொருள் கொண்டேன். 'ஒவ்வாத் துணிவு' என்று பாட்டில் இருந்தாலும், அதில் உள்ள தகர ஒற்று மிகை என்று பட்டது. "துற்றவிழ் ஒவ்வா; இதுதான் துணிவு" என்று பொருள் கொள்ள அந்த ஒற்று வேண் டியதில்லை.

தானங்கள் பலவற்றிலும் சிறந்தது அன்னதானம் என்பது யாவருக்கும் தெரியும். இந்தப் பாடல் அன்ன தானத்தின் பெருமையை உறுதியாகச் சொல்ல வந்தது என்று கருதினேன்.

துற்று என்ருல் உணவு என்று பொருள்; அவிழ் - சோறு. துற்றவிழ் என்பது பிற உணவுகளை விலக்கிச் சோருக இடும் உணவைக் குறிக்கிறது. 'தானம் எத்தனை ஆனாலும் சோறு போடும் அன்னதானத்துக்கு ஒவ்வா

என்று இந்த அடிகளுக்குப் பொருள் கொள்வதுதான் பொருத்தம் என்று முடிவு கட்டினேன். இப்போது நான் கண்ட பொருளைச் சொல்கிறேன்.

அற்றம் இல் தானம்-சோர்வு இல்லாத தானங்கள், எனை பல ஆயினும்-எத்தனை பல ஆனாலும், துற்று அவிழ்-உண்ணும் சோற்றை (அன்னதானத்தை), ஒவ்வா - ஒப்பாகா; துணிவு-இதுவே துணிவு; என்னும் ஆறு-என்பதை உணர்த்தும் முறை. பின் பகுதிக்குப் பொருள் விளங்கி விட்டது. 'தொகுத்து விரல் வைத்தது, இந்தக் கருத்தை விளக்கியவாறாகும்' என்று அப்படிச் செய்தவன் விளக்கம் கூறுவதாக இந்தப் பாட்டு அமைந்திருக்கிறது என்பது பின்னும் தெளிவாயிற்று.

இப்போது முன் பகுதியில் சிந்தனையைச் செலுத்தினேன்.

> துற்றன வாகத் தொகுத்து விரல்வைத்த
> தெற்றுக்கஃ தென்னின்—இது அதன் காரணம்!

'துற்றனவாக' என்பதற்கு 'உண்டனவாக' என்று பொருள். அஃது எற்றுக்கு-அது எதற்காக; 'விரல் வைத்ததாகிய அஃது எற்றுக்கு?' என்று கூட்டிப் பொருள் செய்ய வேண்டும்.

முதல் அடியில்தான் குழப்பம். பொருள் தெளிவு இல்லை. சொல்லுக்குப் பொருள் தெரிகிறது. அந்தப் பொருளுக்குரிய செயல் இன்னதென்று தெரியவில்லை.

அன்னதானத்தோடு தொடர்புடைய செயல்களை எண்ணிப் பார்த்தேன். உண்ணும்போது நாம் என்ன என்ன செய்கிறோம் என்பதை நினைவுக்குக் கொணர்ந்தேன். சிறிதே ஒளி கிடைத்தது. பிறகு தெளிவாகவே பொருள் விளங்கியது.

அன்று எங்கள் வீட்டில் ஒரு பெரியவர் விருந்தாளி யாக வந்தார். அவருடன் நான் இருந்து உண்டேன். அவர் செய்த செயலே இந்தப் பாட்டின் பொருளைத் தெளிய வைத்தது. அந்தச் செயல் நான் அறியாததன்று. ஆனாலும் அன்று அவர் செயல் உடனே இந்தப் பாட்டை நினைக்கச் செய்தது.

உணவு முடிந்த பின் எங்கள் மரபின்படி சிறிதளவு தண்ணீரை உள்ளங் கையால் வாங்கி உறிஞ்சிவிட்டு எழுவது வழக்கம். அதை 'உத்தராபோசனம்' என்று சொல்வார்கள். உத்தரா போசனம் வாங்கிக்கொண்ட பிறகு ஈரக் கையை இலைக்கருகில் தரையில் அழுத்திவிட்டு, 'விருந்தளித்தவன் சுகம் பெறட்டும்' என்று சொல்வது வழக்கம். கையில் உள்ள ஈரத்தால் தரையில் கைச்சுவடு நன்றாகப் பதியும். விரல்களைச் சேர்த்துக் கையைத் தரையில் வைத்துப் பின்பு அப் பெரியவர் எழுந்தார்.

வளையாபதியில் வரும் செயல்—தொகுத்து விரல் வைப்பது—இதுவாகத்தான் இருக்கவேண்டும் என்று ஊகித்தேன். எதையேனும் உறுதியாகச் சொல்லவேண்டு மானால் தரையில் அடித்துப் பேசுவதுண்டல்லவா? அதுவும் இப்போது நினைவுக்கு வந்தது. வளையாபதியில் வரும் நிகழ்ச்சி என் அகக்கண் முன் நின்றது.

பல வகையான அறங்களைச் செய்யும் ஈகையாளன் ஒருவனுடைய வீட்டுக்கு ஒரு பெரியவர் போனார். அவன் செய்யும் அறங்களையெல்லாம் கண்டு மகிழ்ந்தார். பசித் தோருக்கு வயிறார உணவு வழங்கும் அறத்தையும் அந்தச் செல்வன் செய்தான். அந்தப் பெரியவர் அவன் வீட்டில் உணவு கொண்டார். உண்ட பிறகு, எழும்போது தம் கைவிரல்களைச் சேர்த்து இலைக்கருகில் அறைவது போல வைத்துவிட்டு எழுந்தார். அப்படிச் செய்ததற்கு என்ன காரணம் என்று விருந்தளித்த செல்வன் யோசித்தான்;

புலப்படவில்லை. "எல்லாம் உண்ட பிறகு தொகுத்து விரல் வைத்தீர்களே; எற்றுக்கு அஃது?" என்று கேட்டான்.

"இது அதன் காரணம். தானங்கள் பல ஆனாலும், அன்னதானத்துக்கு அவை ஈடாகா என்று உறுதியாகத் தெரிவிக்கவே அப்படிச் செய்தேன்" என்று அவர் சொன்னார்.

இந்தக் காட்சி பொருத்தமாகத் தோன்றியது. பாட்டு முழுவதற்கும் இப்போது பொருள் விளங்கியது.

'துற்றன ஆக - உணவு முழுவதும் உண்டனவாக (உண்ட பிறகு), தொகுத்து விரல் வைத்தது - விரல்களைச் சேர்த்து (ஈரக் கையை)க் கீழே வைத்ததாகிய, அஃது எற்றுக்கு என்னின் - அந்தச் செயல் எதற்கு என்று கேட்டாயானால், அற்றம் இல் தானம் - சோர்வு இல்லாத தானங்கள், எனைப் பல ஆயினும் - எவ்வளவு பல ஆனாலும், துற்று அவிழ் ஒவ்வா - உணவாகிய சோற்றை ஒப்பாக மாட்டா; துணிவு - இதுவே உறுதி; என்னும் ஆறே - என்பதைப் புலப்படுத்தும் வழி இது.'

உண்ட பின்னர் ஈரக் கையை இலைக்கருகில் வைத்து எழும் செயலுக்குக் கவிஞர் தற்குறிப்பேற்றமாக இந்தப் பொருளைக் கற்பனை செய்து சொல்லியிருக்கலாம்.

எதுவானாலும் அந்தப் பழக்கம் நினைவுக்கு வரா விட்டால், இந்தப் பாட்டுக்குரிய பொருளைத் தெரிந்து கொண்டிருக்க இயலாது.

துற்றன ஆகத் தொகுத்து விரல் வைத்தது
எற்றுக்குஅஃது என்னின்,—இதுஅதன் காரணம்:
அற்றம்இல் தானம் எனைப்பல ஆயினும்
துற்றவிழ் ஒவ்வா; துணிவுஎன்னும் ஆறே!

# எழுதினளே சீதை

இந்த நாட்டில் வழங்கும் நாடோடிப் பாடல்கள் பல. சிறிய சிறிய பாடல்களும் நீண்ட பாடல்களும் இருக்கின் றன. பெரிய பெரிய கதைப் பாடல்களும் பல உண்டு. தேசிங்கு ராஜன் கதை, அல்லியரசாணி மாலை முதலியவை அந்த வகையைச் சேர்ந்தவை. இராமாயணம், பாரதம் சம் பந்தமான பல வரலாறுகளைப்பற்றிய நெடும் பாடல்கள் தமிழ் நாடோடி இலக்கிய உலகத்தில் வழங்கி வருகின்றன.

இராமாயணச் செய்தி இல்லாமல் இலக்கியமோ, பாட்டோ, பழமொழியோ இருப்பது அரிது. இராமா யணம் முழுவதையும் ஏற்றப் பாட்டாகவே பாடுவதுண்டு. தாலாட்டில் இராமாயணம் அமைந்திருக்கிறது. இவற்றை யன்றிச் சின்னஞ் சிறிய பாடல்களில் ராமரும் சீதையும் வருகிறார்கள்.

கும்பகோணமே கோணம்—அந்தக்
குறவர் போட்டதே சோளம்
ராமர் விட்டதே பாணம்—அது
எங்கே போச்சுதோ காணம்

என்று, குழந்தைகள் பாடும் பாட்டிலே இராமாயணம் வருகிறது.

கழல்பாட்டு ஒன்றில் இராமர் போகிற தேசத்தைப் பற்றிய பேச்சு வருகிறது:

ஓர் இராமன் போற தேசம்
என்னென்ன தேசம்
கல்இல்லாத் தேசம்

கறடில்லாத் தேசம்
முள்ளில்லாத் தேசம்
முடக்குவெட்டி ராஜா,

இதே போலவே மற்ரெரு விளையாட்டுப் பாட்டில் சீதாதேவி வருகிருள்:

நான்குத் தோங்கு பம்பரம்
நாங்களாடும் பம்பரம்
சீதா தேவி பம்பரம்,
ஏழைப்பெண் என்கிற ஜானகி
எங்கள் பெண் என்கிற ஜானகி
மாட்டுப்பெண் என்கிற ஜானகி
மகராஜி.

விளையாட்டுப் பாடலிலே இராவணன் கூட வருகிருன். அவன் இல்லாவிட்டால் இராமாயணமே இல்லேயே! பலிஞ்சடுகுடு விளையாட்டுப் பாட்டு ஒன்றில் இராவணன் வருகிருன்; அதோடு குண்டுகூட வருகிறது! விளையாட்டுக்கும் சரித்திரத்துக்கும் சம்பந்தம் இல்லே!

பட்டா பட்டா ராவணு
பறங்கிப் பட்டா ராவணு
நெத்தியிலே குண்டுபோட்டுச்
சுட்டாண்டா ராவணு!

வேறு ஒரு பாட்டில் இராவணனும் சரவணனும் வருகிருர்கள். இரண்டு பெயர்களின் முடிவிலும் ஒலி ஒற்றுமை இருப்பதுதான் அவர்கள் சேர்வதற்குக் காரணம்!

முக்கோட்டு ராவணு
முத்துச் சரவணு.

இது கல்லாங்காய் விளையாட்டில் மூன்று கல்லே வைக்கும்பொழுது சொல்லும் பாட்டு.

ஏற்றப்பாட்டில் இராமாயணச் செய்திகள் பல இடையிடையே வரும்:

இலங்கா ராவணனை
ஏனுவதை செய்தார்?
இலங்கையைக் கொளுத்தித்
திரும்பினர் அயோத்தி.
அந்த வண்ணுனலே
அல்லல் பட்டாள் சீதை,
ஏழைவண்ணு னலே
சீதைவனம் போனள்.
என்னகா ரணமோ
இலங்கைபற்றி வேக?

ஏற்றக்காரன் ஏற்றம் இறைக்கத் தொடங்கும்போது, பல தெய்வங்களைத் துணைக்கு அழைப்பான். பிள்ளையாரும், பெருமாளும், சிவனும், முருகரும் அவனுடைய துதியில் வருவார்கள். இராமனிடத்திலும் அவனுக்குப் பக்தி உண்டு:

ராமரே துணைவா ராகவரே தண்டம்
ரக்ஷிப்பதுன் பாரம் ரெண்டுடனே வாரீர் !

அவன் இராமனையும் சீதையையும் எண்ணுவதோடு அநுமானையும் மறவாமல் நினைக்கிறவன்! அநுமானை நினைக்காமல் இராமகாதை பாராயணம் இல்லை அல்லவா?

சீமைஸ்தலம் பார்க்கச் சீதைபோறேன் என்ருள்
அங்குதய அநுமார் (அவர்) ஆண்டவன் பெருமாள்.
ஏழைபோல ராமர் இருந்தார் கான கத்தில்.

இவ்வாறு வழங்கும் நாடோடிப் பாடல்களில், இராமாயணத்திலும் புராணங்களிலும் காணுத பல வ்ர லாறுகள் வரும். வால்மீகி ராமாயணத்திலும் கம்ப ராமா யணத்திலும் அத்தகைய கதைகளுக்கு ஆதாரம் காண இயலாது. கர்ண பரம்பரையாகப் பல கதைகள் இராமனைப் பற்றி அங்கங்கே வழங்கிவருகின்றன. அவை நாடோடிப் பாடல்களிலும் ஏறிவிட்டன.

ஏற்றப்பாட்டு ஒன்றில், சீதை இராவணன் உரு வத்தை எழுதியதாக வருகிறது. அவள் இலங்கையின் அழகை எழுதி, இராவணன் அழகையும் எழுதினளாம்!

எழுதினளே சீதை இலங்கையின் அழகை;
ராவணன் அழகை—அந்த ராட்சசர் குணத்தை;
எழுதிஒப்ப மிட்டாள் இளங்கொடியாள் சீதை;
படித்துஒப்ப மிட்டாள் பசுங்கிளியாள் மாது;
ராவணன் அழகை—அந்த ராட்சசர் பிறப்பை,
எழுத்துள்ளவர் ராமர் தனக்குள்ளவள் சீதை.

## 2

இப்படி ஒரு விசித்திரமான கற்பனை யாருக்கோ தோன்றிக் கதையாக நடந்து நாடோடிப் பாடலில் ஏறி விட்டது. இந்தக் கதைக்கு ஏதேனும் ஆதாரம் உண்டோ என்று ஆராய்ந்தேன். எத்தனையோ இராமாயணங்கள் இருக்கின்றன. ஒவ்வோர் இராமாயணத்தில், பிறவற்றில் காணுத புதிய செய்திகள் இருக்கின்றன. அந்த முறையில் இந்தக் கதையின் கரு எதிலேனும் இருத்தல் கூடுமோ என்று பல புலவர்களை விசாரித்தேன்.

கடைசியில் புலன் அகப்பட்டது: வங்கமொழியில் சந்திராவதி என்னும் பெண்மணி பாடியுள்ள இராமா யணத்தில் இப்படி ஒரு வரலாறு வருகிறதாம்.[1]

சந்திராவதி கி. பி. 16, 17-ஆம் நூற்றுண்டில் வாழ்ந் தவள். சந்திராவதி ராமாயணம் சிறந்த இலக்கிய நடை யில் அமையாவிட்டாலும், பெண்களுக்கும் விளங்கும் தெளிவான நடையில் இருக்கிறது. இந்த இராமாயணத்தில் சீதை இராவணன் உருவை எழுதிய கதை வருகிறது.

★

1. இந்தச் செய்தியைச் சொன்னவர் என் அன்பர் ஸ்ரீ த. நா. ஸேனுபதி.

கைகேயிக்கு ஒரு பெண் இருந்தாள். அவள் குகியி என்னும் பெயருடையவள். தன் அன்னையின் இயல்பை யும் உருவத்தையும் அப்படியே பெற்றவள் அவள். சீதை முதலில் வனவாசம் செல்வதற்குக் கைகேயி காரணமாக இருந்தாள். இரண்டாம் முறை சீதை வனவாசம் செய்த கதை உத்தரகாண்டத்தில் இருக்கிறது. அந்த வனவாசத் துக்குக் கைகேயி மகளாகிய குகியி காரணமானாள்.

இராமன் இராவணனை வென்று அயோத்திக்கு வந்து முடி சூட்டிக்கொண்டான். நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து செழித்தது. சீதை கருவுற்றாள். இராமன் கைகேயியி னிடம் அளவற்ற அன்பு பூண்டு ஒழுகினான்.

ஒரு நாள், அந்தப்புரத்தில் சீதை தன் நாத்தியாகிய குகியியோடு பேசிக்கொண்டிருந்தாள். இராமன் இராவண வதம் செய்ததைப் பற்றிய பேச்சு வந்தது. இலங்கையில் சிறையிருந்த செல்வியாகிய சீதை இலங்கையைப் பற்றி ஏதோ சொன்னாள். அப்போது அவளுடைய அருமை நாத்தி யாகிய குகியி, "அண்ணி, இராவணன் பத்துத் தலை இருபது கைகள் கொண்டவன் என்று சொல்கிறார்களே; அவன் எப்படி இருப்பான்? நீ பார்த்திருப்பாயே; சொல், பார்க்கலாம்" என்றாள்.

"அவனை நான் கண்ணெடுத்துப் பார்த்ததில்லை. ஆனால், அவன் கால்நகத்தைப் பார்த்திருக்கிறேன். அதைக் கொண்டே அவன் உருவம் எப்படி இருக்குமென்று உணர்ந்துகொள்ளலாம்."

"அது எப்படி முடியும்?"

"நன்றாக உணரலாம்; எழுதியும் காட்டலாம்."

"அப்படியா? நீ சொல்வது வியப்பாக இருக்கிறதே! அப்படி எழுதக்கூடியவர்கள் யார்? உன்னால் எழுத முடியுமா? முடியுமானால் எழுதிக் காட்டு, பார்க்கலாம்!" என்று ஆவலோடு கேட்டாள்.

சீதை சிரித்துக்கொண்டே, "இது ஒரு பெரிய காரியம் அன்று. ஏதாவது ஓலை இருந்தால் கொண்டுவா. என் கை நகத்தால் எழுதிக் காட்டுகிறேன்" என்றாள்.

உடனே குகியீ அருகில் இருந்த விசிறி ஒன்றை எடுத்து, "எங்கே, இதில்தான் எழுது, பார்க்கலாம். கால் நகத்தைக் கண்டவள் கை நகத்தால் முழு உருவமும் எழுத வேண்டுமானால், நீ பெரிய ஓவியக்காரியாகத்தான் இருக்க வேண்டும்!" என்று அதைக் கொடுத்தாள்.

வஞ்சமில்லா நெஞ்சுடைய சீதை அந்த விசிறியில் இராவணன் உருவத்தை வரைந்து காட்டினாள்.

"நீ மிக்க சாமர்த்தியமுடையவள், அண்ணி. அந்த இராவணன் பெரிய பலசாலியென்றே தோன்றுகிறது" என்று வியந்துவிட்டுக் குகியீ பேசிக்கொண்டே இருந்தாள்.

சீதை அப்படியே கண் அயர்ந்துவிட்டாள். சூழ்ச்சியில் வல்ல கைகேயியின் மகள் இராவணன் உருவெழுதிய விசிறியைச் சீதையின் மார்பின்மேல் மெல்ல வைத்துவிட்டு, இராமனிடம் சென்றாள். "அண்ணா, உன் மனைவியை வந்து பார்! அவள் மனம் என்ன நினைத்துக்கொண்டிருக்கிறதோ!" என்று கூறினாள்.

இராமன் அந்தப்புரம் சென்று சீதையைக் கண்டான். அவள் ஒரு கவலையும் இன்றி அமைதியாக உறங்கிக் கொண்டிருந்தாள். அவள் மார்பில் இருந்த விசிறியைக் குகியீ சுட்டிக் காட்டினாள். அதைப் பார்த்தான் இராமன். பத்துத் தலையும் இருபது கைகளுமாக இராவணன் அதில் விளங்கினான்.

இராமன் அதைப் பார்த்துவிட்டு, குகியீயின் முகத்தைப் பார்த்தான். அவள் கண்களில் இகழ்ச்சிக் குறிப்புக் கொந்தளித்தது. 'உன் மனைவியின் எண்ணம் யாரிடம் இருக்கிறது தெரிகிறதா?' என்று அந்தக் கண்கள் கேட்டன.

உலகத்துக்கே எடுத்துக்காட்டாக வாழ வந்த இராமன், 'ஊர் வாயை மூட உலை மூடி இல்லை' என்பதை உணர்ந்தான். சீதையை எழுப்பி, "இந்த உருவத்தை யார் எழுதியது?" என்று கேட்டான். குழந்தை உள்ளம் படைத்த சீதை, தான் எழுதியதாகச் சொன்னாள்.

"ஏ! இன்னும் உனக்கு அவன் நினைவு போகவில்லையா?" என்று கடிந்துகொண்டு, உடனே லட்சுமணனை அழைத்தான் இராமன்.

"லட்சுமணா, இந்தக் கணத்திலேயே இவளைக் காட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டு வா" என்று கட்டளையிட்டார். அப்போது குகியியின் அகமும் முகமும் மலர்ந்தன.

ஒரு வண்ணான் குறை கூறியதைக் கேட்ட இராமன், சீதையைக் காட்டுக்குப் போகச் செய்தான் என்பது உத்தர ராம சரித்திரம்கூறுவது. அதைஏற்றப்பாட்டும்சொல்கிறது:

அந்தவண்ணா னாலே
அல்லறப்பட்டாள் சீதை
ஏழைவண்ணா னாலே
சீதைவனம் போனாள்.

என்று கூறுகிறது. ஆயினும், மேலே சொன்னபடியும், ஒரு கதை பாரத நாட்டில் வழங்கி வந்திருக்கிறது. அது, முதலில் எங்கே தோன்றியதோ தெரியவில்லை. வங்க மொழிக் காவியத்திலும் தமிழ் நாடோடிப் பாடலிலும் இருக்கிறது.

மனித இயல்புகளைக் காட்டி இக்காலத்தில் கதைகளைப் புதிய கற்பனையாக எழுதுகிறார்கள். அந்தக் காலத்தில் தெரிந்த கதாபாத்திரங்களை வைத்துக்கொண்டு கதை 'கட்டுவது' வழக்கம். இராமன் எத்தனை இடங்களுக்குப் போய் எவ்வளவு லிங்கப் பிரதிஷ்டை பண்ணினான் என்பதற்குக் கணக்கு வழக்கே இல்லை. அவன் அந்த அந்தத் தலத்தில் வந்து செய்த செயல்களைத் தல புராணங்களில் காணலாம். அந்த வகையில் எழுந்தது இந்தக் கதையும் என்று கொள்வதே பொருத்தமாகும்.

# அவர் காணுதது

இராமாயணம், பாரதம் என்னும் இரண்டும் இதி காசங்கள் என்று சொல்லப் பெறும். இந்த இரண்டும் இமயம் முதல் குமரிவரையில் பரவி வேரூன்றிவிட்டன. இவற்றின் மூலம் வடமொழியில் இருந்தாலும், பாரத நாட்டு மொழிகள் எல்லாவற்றிலும், இவ்விரண்டும் கவிஞர்களால் மொழி பெயர்த்தும், தழுவியும் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இவற்றையன்றி, இந்த இரண்டு பேரிதி காசங்களிலிருந்து சில பகுதிகளை எடுத்துத் தனி நூல்க ளாகப் புலவர்கள் இயற்றியிருக்கிறார்கள். நாடோடிப் பாடல்களிலும் இவற்றின் பகுதிகள் புகுந்திருக்கின்றன. இவ்விரண்டினுடைய சம்பந்தமாக அந்த அந்த மொழிகளி லுள்ள பழமொழிகள் பல பல.

வால்மீகி முனிவர் வடமொழியில் இராமாயணத்தை இயற்றினார்; வியாசர் பாரதத்தை இயற்றினார். தமிழில் இவை சம்பந்தமான நூல்கள் இருக்கின்றன. அந்த மூல நூல்களில் காணப்படாத பல கதைகள் நாடோடியாக வழங்கி வருகின்றன. அவை நிகழ்ந்த இடமென்று சில இடங்களைக் குறித்து அடையாளமும் காட்டுகிறார்கள்.

அவற்றைக் கொண்டு அவை அவ்விடங்களில் நிகழ்ந் தன என்று கொள்ளக்கூடாது. மக்களுக்கு இராமா யணத்திலும் பாரதத்திலும் உள்ள அளவற்ற ஈடுபாட் டையே அவை காட்டும். இராமன் வந்து பூசித்ததாகப் பல வரலாறுகள் சொல்லுகின்றன; பீமன் வழிபட்டதாகப் பல இடங்கள் உண்டு. வரலாற்று முறையில் இவற்றை ஆராய வேண்டிய அவசியம் இல்லை. அன்பு காரணமாக

அப்படிச் சொல்லிக் கொள்கிறார்கள் என்று தெரிந்து கொண்டால் போதும். சீதை நீராடிய இடம் ஒன்று அல்ல; இரண்டு அல்ல; எத்தனையோ!

இராமாயணம் சம்பந்தமாக வழங்கும் கதை ஒன்று வருமாறு.

★

இராமன், இராவண சங்காரம் செய்தாயிற்று. இலங்கைக்குப் புகுவதற்கு முன்பே விபீஷணனை இலங்கை அரசனாக முடி சூட்டி விட்டமையால், இலங்கைக்கு அவனே அரசனானான். இராமன் ஏற்றுக்கொண்ட காட்டு வாழ்க்கையின் பன்னிரண்டு ஆண்டுகளும் முடியும் நிலையில் இருந்தன. இனி விரைவாகச் சென்று, பரதனுடைய துயரத்தைப் போக்க வேண்டும். வானர வீரர்களில் மடிந்தவர்களை யெல்லாம் மீட்டும் உயிர்பெற்றெழச் செய்த பிறகு, யாவரோடும் அயோத்திக்கு மீளும் வகையை ஆராய்ந்தான் இராமன். சீதா பிராட்டி நீரிலும் நெருப்பிலும் குளித்துவிட்டுத் தூயவளாக நிற்கிறாள். யாவரும் ஊருக்குப் புறப்பட வேண்டும்.

சீதை பெண்ணுக்குரிய இயல்பு படைத்தவள். அவள் இலங்கையில் ஓர் அம்மிக் கல்லைப் பார்த்தாளாம். அது மிகவும் நன்றாக இருந்ததாம். அதை எப்படியாவது அயோத்திக்கு எடுத்துச் செல்ல வேண்டுமென்ற ஆவல் உண்டாயிற்றாம். தனக்குப் பிரியனான ஆஞ்சநேயனைக் கூப்பிட்டு, அந்த அம்மிக் கல்லைக் காட்டி, "அதை ஊருக்கு எடுத்துப்போக வேண்டும்" என்று கட்டளையிட்டாளாம். பிராட்டியார் விருப்பப்படியே அவன் அதனை எடுக்கும்போது, அருகில் ஜாம்பவான் நின்று கொண்டிருந்தார். "இதை ஏன் அப்பா தூக்குகிறாய்?" என்று கேட்டாராம்.

"அயோத்திக்குக் கொண்டுபோக வேண்டும்."

"இந்த அம்மிக் கல்லையா? யார் இது வேண்டும் என்று சொன்னார்கள்?"

"பிராட்டிதான்."

ஜாம்பவான் சற்றே சிரித்துக்கொண்டார். 'எவ்வளவு சிறந்த நிலையில் இருந்தாலும் பெண் இயல்பு போகவில்லையே!' என்பதை நினைத்துத்தான் சிரித்திருக்க வேண்டும். உடனே ஆஞ்சநேயரிடம், "நீ சிறிது இரு. நான் பிராட்டியைக் கண்டு இரண்டு வார்த்தை பேசவேண்டும். பேசின பிறகு, பிராட்டி 'இது அவசியம் வேண்டும்' என்று சொன்னால் எடுத்துச் செல்லலாம்" என்றார். பெரியவர் சொல்வதற்கு மதிப்புக் கொடுக்க வேண்டுமென்று ஆஞ்சநேயன் சிறிதே நின்றான்.

ஜாம்பவான் வேகமாகப் பிராட்டி தனியாக இருக்கும் இடம் சென்றார். "ஒரு விண்ணப்பம்" என்று கூறினார்.

"என்ன, சொல்லலாமே!"

"நான் வெகு காலம் கண்டவன். என்னுடைய வயசு எனக்கே தெரியாது."

"ஆமாம்; 'ஜாம்பவான்' என்றால் 'பழையவர்' என்று மக்கள் வழங்கும்படி, உம்முடைய நீண்ட ஆயுளைப் பற்றிய புகழ் உலக முழுவதும் பரவி இருக்கிறதே; அது எனக்குத் தெரியாதா?"

"நான் மூன்று உலகமும் சுற்றியவன்."

"அப்படியா?"

"அமிர்தம் அமிர்தம் என்று தேவர்களெல்லாம் சொல்லிக்கொள்கிறார்களே, அதைக் கடையும்போது நான் அருகில் இருந்தேன். நானும் ஒரு கை பிடித்துக் கடைந்ததுண்டு."

"உமக்கு மாத்திரம் அமிர்தத்தைக் கொடுக்காமல் ஏமாற்றி விட்டார்களா?"

"அமிர்தத்தை உண்ணுமலே நான் சிரஞ்சீவியாக இருக்கிறேன். பிரம்மாவுக்கு இப்போது நாலு முகங்கள் இருக்கின்றன. ஆதி காலத்தில் ஐந்து முகங்கள் இருந்தன. அவர் அகங்காரப்பட்டதனுல் பரமசிவன் ஒரு தலையைக் கிள்ளி விட்டான். அவர் ஐந்து முகத்தோடு இருந்த போது, நான் அவரைப் பார்த்துப் பேசியிருக்கிறேன்."

"அப்போதும் அவன் சிருஷ்டித் தொழில்தானே பண்ணிக்கொண்டிருந்தான்?"

"ஆமாம்; சிருஷ்டியிலே எத்தனை விசித்திரம்! அப்பொழுதெல்லாம் எல்லா மலைகளுக்கும் சிறகுகள் இருந்தன. பிற்பாடுதான் இந்திரன் அந்தச் சிறகை வெட்டிவிட்டான். மலைகள் சிறகோடு இருந்த காலம் எனக்குத் தெரியும்."

"இப்போதுகூட மைநாகம் என்ற மலை கடலுக்குள் ஒளிந்துவிட்ட தென்றும், அதற்குச் சிறகுகள் இருக்கின்றன என்றும் சொல்கிறுர்களே!"

"ஆமாம்; உண்மை. கடல் என்றவுடன் நினைவுக்கு வருகிறது. இப்போது இந்தப் பெரிய கடல் முழுவதும் ஒரே உப்பு நீராக அல்லவா இருக்கிறது? மிகப் பழைய காலத்தில் நல்ல நீரே நிரம்பியிருந்தது. அதையும் நான் கண்டிருக்கிறேன்."

"உப்பு நீர் இல்லாத கடலா!"—பிராட்டி வியந்தாள்.

"ஆமாம்; மற்ருெரு செய்தி. இப்போது மன்மதன், அங்கம் பிறருக்குப் புலப்படாமல் அனங்கனுகத் திரிகிருன்."

"பரமசிவமே அவனை எரித்தாராமே?"

"ஆமாம்; அவன் அப்பெருமானிடம் குறும்பு செய்தான். நெற்றிக் கண்ணைத் திறந்து எரித்து விட்டான். மன்மதன் எரிந்து உருவத்தை இழப்பதற்கு முன்பு அவனை

நான் பார்த்திருக்கிறேன். என்ன அழகான வடிவு! கையில் கரும்பு வில்லுடன் நின்றால் ஆயிரம் கண்கள் வேண்டும், அவனைப் பார்க்க. பைத்தியக்காரப் பிள்ளை, எரிந்து சாம்பலானான்! நல்லவேளை, சிவபெருமான் கருணை கூர்ந்து இரதிக்கு மட்டும் அவன் வடிவம் தெரியட்டும் என்று அருளினான்."

"பரம கருணாநிதி அல்லவா அவர்?"

"அதற்கென்ன சந்தேகம்? அன்று அமரர் நாவைத் தொங்கப் போட்டுக்கொண்டு அமிர்தம் கடைந்தார்களே; அமிர்தம் வருவதற்கு முன் ஆலகாலந்தான் எழுந்தது. அதை அவர்களிடம் உள்ள கருணையால் தான் ஏற்று விழுங்கிக் கண்டத்தில் வைத்துக்கொண்டான் பெருமான். அதனால் நீலகண்டன் ஆனான். நீலகண்டம் இல்லாமல் சுத்தக் கழுத்தோடு அந்தப் பெருமான் இருந்தபோது முதல், நான் தரிசித்துக்கொண்டிருக்கிறேன்."

"இவற்றையெல்லாம் இங்கே இருப்பவர்கள் யாரும் பார்த்திருக்கமாட்டார்கள் அல்லவா?" என்று பிராட்டி கேட்டாள்.

"இவர்கள் யாவரும் நேற்றுப் பிறந்த குழந்தைகள்! இவர்களுக்கு எங்கே இந்தச் செய்திகள் தெரியும்? ஒன்றும் தெரியாது. இந்த இந்திரன் ஆயிரங் கண்ணுடையவனாக இருக்கிறான். இவனுக்கு முகத்தில் மாத்திரம் இரண்டு கண்கள் இருந்த காலத்தை நான் அறிவேன்."

சீதாபிராட்டி சிறிதே நாணினாள்.

"எப்போதாவது ஒரு முறை முனி பத்தினி அகல்யா தேவியைத் தரிசிக்கவேண்டும்" என்று சொன்னாள். பிராட்டிக்கு, இந்திரனுக்கு ஆயிரம் கண் வந்ததற்குக் காரணமான வரலாறு இப்போது நினைவுக்கு வந்திருக்க வேண்டுமென்று ஊகித்துக்கொண்டார், ஜாம்பவான்.

"இப்படியே பழைய நிகழ்ச்சிகளை யெல்லாம் சொல்லிக்கொண்டே இருக்கலாம். அதற்கு நேரம் இல்லை" என்றார் ஜாம்பவான்.

"திடீரென்று உமக்கு, வயசான கிழவர்களுக்கு வருவதுபோல் பழைய கதைகள் நினைவுக்கு வருவானேன்?" என்று கேட்டாள் பிராட்டி.

அப்போதுதான் ஜாம்பவானுக்கே நினைவு வந்தது, நாம் எதற்காக இந்தப் பேச்சைத் தொடங்கினோம் என்று.

"எனக்கும் வயசாகிறது. அதனால் மறதி வந்து விட்டது. இப்போது ஒரு சமாசாரம் காதில் விழுந்தது. எத்தனையோ காலமாக எத்தனையோ நிகழ்ச்சிகளைக் கண்ட எனக்கு அந்தச் செய்தி புதிதாக இருந்தது. எவ்வளவோ பெரிய மனிதர்களுடன் நான் பழகியிருக்கிறேன். ஆனாலும் இப்படி ஒரு காரியத்தை அவர்கள் செய்ததில்லை."

பிராட்டிக்கு ஒன்றும் விளங்கவில்லை. "நீர் காணாதது என்ன இப்போது நடந்து விட்டது?" என்று படபடப்போடு கேட்டார்.

"ஆஞ்சநேயன்தான் சொன்னான். ஏதோ ஓர் அற்ப அம்மிக் கல்லை அயோத்திக்குக் கொண்டு போக வேண்டுமென்று தாங்கள் அபிப்பிராயப்பட்டீர்களாம்?."

"ஆமாம், அது உண்மைதான். அதற்கும் நீர் சொல்ல வந்ததற்கும் என்ன சம்பந்தம்?"

"இலங்கை முழுவதையும் பிரபு இராமசந்திர மூர்த்தி விபீஷணனுக்கு வழங்கி விட்டார்."

"அது எனக்குத் தெரியுமே!"

"இதில் உள்ள ஒவ்வொரு மணலும் விபீஷணனுக்குச் சொந்தம்."

"ஆமாம்."

"கொடுத்த சொத்தில் ஓர் இம்மியளவு கூடத் திரும்பப் பெறுவது பெரியவர்களுக்கு வழக்கம் இல்லை. அம்மியானாலும் சரி, ஆனையானாலும் சரி—நாம் எடுத்துக் கொண்டு போனால், கொடுத்ததைத் திருப்பி வாங்கிக் கொண்ட பாவம் நேரும்."

"பாவமா?" சீதை சற்றே திகைத்தாள்.

"நான் சொல்லுகிறேன் என்று பிராட்டி சினம் கொள்ளக் கூடாது. நான் உண்மையைச் சொல்ல வந்தேன். என்னுடைய இவ்வளவு கால அநுபவத்தில் எத்தனையோ நிகழ்ச்சிகளைப் பார்த்திருக்கிறேன். கொடுத்ததைத் திருப்பி வாங்கிக் கொண்டவர்களை நான் பார்த்ததே இல்லை. இதைப் பிராட்டியின் திருச் செவிகளில் சார்த்த வேண்டுமென்றே வந்தேன்."

சீதை யோசனையுள் ஆழ்ந்தாள். பின்பு, "ஆஞ்சநேயனைக் கூப்பிடும்" என்றாள். ஜாம்பவான், "நானே சொல்லி விடுகிறேன்" என்றார். "சரி; நல்ல வேளை! சமயத்தில் எனக்கு அறிவுரை கூறினீர்" என்றாள் பிராட்டி.

"அறிவுரையா? அப்படிச் சொல்லக் கூடாது. ஏதோ விண்ணப்பம் செய்ய வேண்டுமென்று தோன்றியது; சொன்னேன்" என்று சொல்லி, ஜாம்பவான் காரியத்தைச் சாதித்துக்கொண்ட மகிழ்ச்சியோடு ஆஞ்சநேயனை நோக்கி ஓடினார்.

ஜாம்பவான் சொன்னவற்றை யெல்லாம் அமைத்து ஒரு புலவர் பாடல் ஒன்றைப் பாடியிருக்கிறார். புலவர் பெயர் இன்னது என்று இப்போது தெரியவில்லை. தமிழ் நாட்டில் வழங்கும் தனிப் பாடல் இது.

அலைகடல் கடையக் கண்டேன்;
 அயன்ஐந்து சிரமும் கண்டேன்;
மலை இரு சிறகு கண்டேன்;
 வாரிதி நன்னீர் கண்டேன்;
சிலைமதன் வடிவு கண்டேன்;
 சிவன்சுத்தக் கழுத்துக் கண்டேன்;
குலவரி இருகண் கண்டேன்;
 கொடுத்ததை வாங்கக் காணேன்.

[*அயன் - பிரமன்; வாரிதி - கடல்; நன்னீர் - உப்பில்லாத நல்ல தண்ணீர்; சிலை - வில்; மதன் - காமன்; குலவு அரி; அரி - இந்திரன்.*]

# துயிலாத காதலி

எங்கே பார்த்தாலும் இருள்; குழந்தைகள் எல்லாம் கதிரவன் மறைந்தவுடன் உணவு உண்டு படுத்துக்கொண்டு விட்டார்கள். விளையாட்டுப் பிள்ளைகள் இரவில் சிறிது நேரம் 'கலகல' வென்று பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு அவர்களும் தூங்கிவிட்டார்கள். வீட்டு வேலை செய்யும் தாய்மார்கள் எல்லாருக்கும் உணவு அருத்திவிட்டு, பாத்தி ரங்களைக் கழுவி வீட்டைச் சுத்தம் செய்துவிட்டுச் சிறிது நேரம் வீட்டுக்காரரோடு எதையோ பேசிக்கொண்டிருந் தார்கள். அவர்களும் இப்போது தூங்கிவிட்டார்கள் போல் இருக்கிறது.

வயசான கிழவர்களுக்கு எளிதில் தூக்கம் வருகிற தில்லை. யாரிடமாவது நெடுநேரம் வரையில் தம் காலத்துப் பழங்கதையைப் பேசிக்கொண்டே இருப்பார்கள். கேட் பவர்கள் கொட்டாவி விடுவார்கள். ஆனாலும் அந்தக் கிழவர்கள் விட மாட்டார்கள்; அவர்கள் பேசிக்கொண்டே இருப்பார்கள். அவர்கள்கூட அல்லவா இப்போது உடம்பைக் கிடத்தித் துயில்கிறார்கள்?

ஊரில் இரவு நேரமானாலும், தம் வேலையைச் செய்யும் சில ஏழைத் தொழிலாளிகள் இருக்கிறார்கள். எவ்வளவு நேரம் அவர்கள் விழித்துக்கொண்டு வேலை செய்கிறார் களோ அவ்வளவுக்கு அவர்களுக்கு லாபம் உண்டு. பொருள் அவர்களை விழித்திருக்கச் செய்கிறது. ஆனாலும் அவர்களும் மனிதர்கள் தாமே? அவர்களுக்கும் அலுப்பினால் கண்கள் இழுத்தன. அவர்களும் படுத்து உறங்கு கிறார்கள்.

எல்லாரும் தூங்கும்போது தூங்காமல் வேலை செய்பவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு அப்படிச் செய்வது கடமை. அதற்காகவே அவர்கள் இருக்கிறார்கள். ஊரில் திருடர்களால் தீங்கு வராமல் காவல் புரியும் நகர்காவலர் அவர்கள். அவர்கள் விளக்கு, தடி, உரத்த குரல் இவற்றோடு ஊரைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். அங்கங்கே குரல் கொடுத்துக்கொண்டு போனார்கள். இரவின் அழுத்தமான கைகள் அவர்களையும் அணைத்துக்கொண்டன. அந்த நள்ளிரவில் அந்தக் காவலர்களும் தூங்கிப் போனார்கள்.

தன் குழந்தை நோய்வாய்ப்பட்டது கண்டு அதற்கு வேண்டிய உணவும் மருந்தும் கொடுப்பதற்காகத் தாய் விழித்திருக்கிறாள். அடிக்கடி குழந்தை சிணுங்கிக் கொண்டே இருக்கிறது. அவள் அதற்கு வேண்டிய இதமான செயல்களைப் புரிகிறாள். இரவு நெடுநேரம் வரையில், அவள் ஒன்று போக ஒன்று செய்துகொண்டே இருக்கிறாள். நள்ளிரவு வந்தது. குழந்தை அழவில்லை. அதனிடம் உள்ள நோயும் சற்றே கண் உறங்கியிருக்க வேண்டும்! ஆகவே, அன்புருவமான தாயும் சற்றே கண்ணை மூடிக்கொண்டாள். எப்போதும் குரைக்கும் நாய் தூங்குகிறது. இரவிலே நடமாடும் இயல்புள்ள பேயும் தூங்குகிறது. எங்கும் ஓரே இருள்; அமைதி.

ஆனால்......?

இந்த நள்ளிரவில் பயங்கர மோனத்துக்குச் சாட்சியாக ஓர் உயிர் விழித்துக்கொண்டே இருக்கிறது. கடவுளைச் சொல்லவில்லை. காதலனைப் பிரிந்து, 'அவன் இன்று வருவானோ; நாளை வருவானோ!' என்று காத்துக் கிடக்கும் காதலி ஒருத்தி மட்டும் துயிலாமல் விழித்துக் கொண்டிருக்கிறாள். அவள் இமைகள் எவ்வளவு முயன்றாலும் மூடிக்கொள்வதில்லை.

கொஞ்சம் கொஞ்சமாக ஊரோசை அடங்கி வருவதை அவள் கவனிக்கிறாள். தாமரைப் போது விரிந்து மெல்ல மெல்ல ஒவ்வோரிதழாக மடங்கினால் எப்படி இருக்கும்? அப்படியல்லவா உலகம் மெல்ல மெல்ல ஒடுங்கி நிற்கிறது? இதுவே இவ்வளவு பயங்கரமாக இருக்கும்போது பிரளயம் இன்னும் எவ்வளவு பயங்கரமாக இருக்கும்? குழந்தையைப் பெற்றவள் துயில்கிறாள்; குழந்தையை இழந்தவள் துயில்கிறாள்; கடன் கொடுத்தவன் தூங்குகிறான்; கடன் கொண்டவனும் தூங்குகிறான்.

எல்லாரும் துயிலில் ஆழ்ந்திருக்கும்போது அவள் மாத்திரம் விழித்திருக்கிறாள். 'இரவு நள்ளென்று செறிந்திருக்கிறது. பேச்சு அடங்கி யாவரும் அடங்கிவிட்டார்கள். பரந்த உலகம் முழுவதுமே தூக்கத்தில் ஆழ்ந்து விட்டது. இந்த மோனப் பரப்பினிடையே நான் ஒருத்தி தான் தூங்காதவள். ஆம்; நான் ஒருத்திதான்; வேறு யாரும் இல்லை' என்று அவள் நினைத்துக் கொள்கிறாள்; வருந்துகிறாள்; பெருமூச்சு விடுகிறாள்.

> நள்ளென் றன்றே யாமம்; சொல்அவிந்து
> இனிதடங் கினரே மாக்கள்; முனிவின்று
> நனந்தலை உலகமும் துஞ்சும்;
> ஓர்யான் மன்ற துஞ்சா தேனே!

[நள் என்றன்று யாமம் - நடு இரவு செறிவுடையதாக இருக்கிறது; அவிந்து - அடங்கி; முனிவு இன்று - வெறுப்பு இல்லாமல்; நனந்தலை - பரந்த இடத்தை உடைய; துஞ்சும் - தூங்கும்; ஓர் யான் - நான் ஒருத்தி மட்டும்; மன்ற - நிச்சயமாக.]

இப்படி ஒரு காதலி நினைந்து தன் தனிமை கருதி வருந்தியதாகப் பதுமனார் என்னும் புலவர் பாடினார். இந்தப் பாடல் குறுந்தொகையில் இருக்கிறது.

★

திருவள்ளுவர் படைத்த காதலி ஒருத்தி இதே நிலையில் இருக்கிறாள். அவளுக்கும் உலகம் முழுவதும் தூங்கு

வதைக் கண்டு வருத்தமாக இருக்கிறது. துயரம் அடை கிறவர்களுக்குத் தம்மைப் போலத் துயருறுபவர் வேறு ஒருவர் இருந்தால் அவரைக் கண்டு சற்றே ஆறுதல் பிறக்கும்; அவரிடம் இரக்கமும் தோன்றும். இந்தக் காதலிக்கு அப்படி ஒரு நிலை வருகிறது. உலகத்தில் பறவை, விலங்கு, மனிதர் எல்லாரும் தூங்குவதை அவள் உணர்ந்தாள்.

'அட, இவ்வளவு பேரும் பகல் நேரத்தில் தங்கள் தங்கள் வேலையைப் பார்ப்பார்கள்; ஓடி ஆடி உழைப்பார்கள். அத்தனை பேரும் இப்போது எல்லாவற்றையும் மறந்து தூங்குகிறார்களே! இரவு வந்ததனால் அல்லவா இவர்கள் துயில்கிறார்கள்? ஆம்; இந்த இரவே இவ்வளவு பேரையும் தூங்கச் செய்திருக்கிறது. நான் ஒருத்திதான் அதன் கைக்குள் அகப்படவில்லை. நான் மாத்திரம் தூங்காமல் இருக்கிறேன் என்றல்லவா நினைத்தேன்? அது தவறு, தவறு! இவ்வளவு உயிர்களையும் தூங்கப் பண்ணிய இரவு என்னும் நங்கை தூங்கவில்லையே! இதோ உலக முழுவதும் இருள் படர்ந்த மேனியோடு பரந்து நிற்கிறாளே! குழந்தைகளைத் தூங்கச் செய்துவிட்டுத் தான் மாத்திரம் விழித்திருக்கும் தாயைப்போல அல்லவா இருக்கிறாள்? ஐயோ! பாவம்! அவளுக்கு நான் ஒருத்திதான் துணையாக இருக்கிறேன்' என்று இரங்குகிறாள். எப்படியோ ஆறுதல் பெற வேண்டுமே! அந்தப் பேதை மனம் இப்படியெல்லாம் கற்பனை செய்துகொண்டு இரங்குகிறது.

**மன்உயிர் எல்லாம் துயிற்றி, அளித்துஇரா!**
**என்அல்லது இல்லை துணை.**

[உலகத்தில் நிலைபெற்ற உயிர்களையெல்லாம் தூங்கச் செய்துவிட்டு – ஐயோ பாவம்! இந்த இரவு - என்னை அன்றி வேறு துணையின்றி இருக்கிறது.]

தன்னைப் பார்த்து மற்றவர் இரங்கவேண்டிய நிலையில் இருப்பவள் இரவைப் பார்த்து, "ஐயோ பாவம்!" என்று இரங்குகிறாள்.

★

வேறு ஒருத்தி தன் தனிமைக்குத் துணையாக மற்றொன்றைக் கண்டாள். அவள் கடற்கரையில் உள்ள ஊரில் வாழ்கிற பெண். காதலன் பிரிந்து போயிருப்பதனால் இரவு நேரங்களில் தூக்கமின்றிப் புரளுகிறாள். அவளுடைய காதலன் காளத்தியில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமான். அவளை நமக்கு அறிமுகப்படுத்துகிற புலவர் நக்கீரர். **கைலை பாதி காளத்தி பாதி அந்தாதியில்** அறிமுகப் படுத்துகிறார்.

இரவில் தனிமைத் துயரம் மிகுந்து தோன்றுகிறது. உலகம் முழுவதும் அவளை ஒதுக்கி வைத்துவிட்டுப் பாயலில் தூங்குகிறது. அவளோ தனிமையில் ஏங்கித் தவிக்கிறாள். 'ஒருத்தராவது ஏன் என்று கேட்கவில்லையே!' என்று வாடுகிறாள். ஊர் நன்றாகத் தூங்குகிறதைக் கவனிக்கிறாள். அந்தத் தூக்கத்தினிடையே 'சோ' என்ற ஓசை கேட்கிறது. இடையீடு இல்லாமல் அந்த ஓசை இருப்பதனால் அது மோனத்தில் கரைந்துவிடுகிறது; அல்லது மோனந்தான் அதில் கரைந்துவிடுகிறதோ? உற்றுக் கவனிப்பதற்கு முன்னால் அந்த ஓசையைப் பற்றிய உணர்வே வரவில்லை. இப்போது தெளிவாகத் தெரிகிறது. கடல் அல்லவா அப்படி முழங்குகிறது?

அந்த இளம் பெண்ணுக்கு இப்போது சிறிது ஆறுதல் உண்டாகிறது. 'இந்தக் கடலும் நம்மைப்போல் விழித்திருக்கிறது' என்ற நினைவே அந்த ஆறுதலை உண்டாக்குகிறது. பின்னும் கவனிக்கிறாள். 'நம்மைத்தான் காளத்தியான் பிரிந்து சென்றான்; தூங்காமல் இருக்கிறோம். இந்தக் கடலுக்கு என்ன வந்தது? இது சுகமாக அலையடங்கித்

தூங்கலாமே. ஒருகால் இதுவும் நம்மைப்போலக் காளத்தி யானிடம் காதல் கொண்டுவிட்டதோ?

'இந்தக் கடலையே கேட்டுவிடுவோமே!' ஆம்; அவள் கடலைக் கேட்க முற்படுகிருள். 'கடலுக்குக் காது உண்டா?' என்று கேட்கிறீர்கள்? 'கடலுக்குக் காதல் உண்டா?' என்ற கேள்வியை அல்லவா முதலில் கேட்க வேண்டும்?

அவள் கடலைக் கேட்கிருள்: 'நான் சிறிய பெண். நீ பெரிய கடல்; இருங்கடல். அப்படி இருந்தும் உனக்கு இந்தத் துன்பம் வந்துவிட்டதா? நான் படுகிற வேதனையை நீயும் படுகிருயே. உலகத்தில் உள்ள உயிர்கள் எல்லாம் கண்மூடித் துயில்கின்றன. இந்த நள்ளிரவிலும் உன் கண் துயிலாமல் இருக்கிறதே! நீயும் காளத்தியான் திரு வடிக்கு அன்பு கொண்டு காதல் பூண்டாயோ?'

காமுற்ருய் ஆம்அன்றே,
காளத்தி யான்கழற்கே?
யாம்உற்ற துற்ருய்,
இருங்கடலே!—யாமத்து
ஞாலத்து உயிரெல்லாம்
கண்துஞ்சும் நள்ளிருள்கூர்
காலத்தும் துஞ்சாதுன் கண்.

[காமுற்ருயாம் அன்றே - காதல் கொண்டாய் அல்லவா? யாம் உற்றது - யாம் அடைந்த துயரத்தை; இருங்கடலே - பெரிய கடலே.]

★

ஔவையார் மற்ருெரு பெண்ணைக் காட்டுகிருள். குறுந்தொகைப் பாட்டில் காட்சி அளிக்கிருள் அந்தப் பெண்.

அவளும் இப்படித் தூங்காமல் விழித்துக்கொண்டு அலமருகிருள். அவளுடைய ஆருயிர்த் தோழி உடன்

இருக்கிறாள். அவளைத் தேற்றி ஆறுதல் கூறிக்கொண் டிருக்கிறாள். அவள்கூட இப்போது தூங்கிவிடுகிறாள்.

தனிமைத் துயரம் பொறாத அந்த இளம் பெண் உலக மெல்லாம் தூங்குவதைக் கண்டு வருந்தியது உண்மை; ஆனால், இப்போது தோழியும் தூங்கிப்போனதை உணர்ந்தபோது கோபம் கோபமாக வருகிறது. 'ஒருவ ராவது ஏன் என்று கேட்க ஆள் இல்லையே!' என்ற வருத் தம் மீதூர்கிறது.

குழந்தைகள் எங்காவது விழுந்துவிட்டால் ஓரளவு அழும்; நாலு பேரைக் கண்டுவிட்டால் அதிகமாக அழும். மற்றவர்களுடைய கவனத்தைத் தம்மிடம் திருப்புவதற் காக அழுது புலம்பும். அவ்வாறு இந்த இளம்பெண் உலகத்தை விழிக்கச் செய்து, தன்னிடம் கவனத்தைப் பாய்ச்சச் செய்யலாமா என்று நினைக்கிறாள். ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது.

அப்போது காற்று வீசுகிறது; குளிர்ந்த காற்று. அதை அவள் விரும்பவில்லை. அதன் குளிர்ச்சி இப்போது முள்ளாகக் குத்துகிறது. அவள் உடம்பை அது அசைப்பதில்லை. ஆனால், அவள் உள்ளம் அசைகிறது; குலுங்குகிறது. புயற்காற்றில் அகப்பட்ட பூங் கொடி போலத் தள்ளாடுகிறது. பிரிவினால் காதல் நோய் பரந்து பொங்குகிறது. அந்த நோயாகிய தீக்கு இந்த அசைவளி- மெத்தென்று அசைந்து வரும் காற்று-துருத்தியாக உதவுகிறது.

'நான் இவ்வளவு துன்பப்படுகிறேனே! சுழன்று அசை யும் இந்தக் காற்று என்னைத் துன்புறுத்த, எத்தனை வேதனைப்படுகிறேன்! இதனை இந்த ஊர் கொஞ்சமாவது தெரிந்து கொண்டிருக்கிறதா? தன்பாட்டுக்குக் கவலை இல்லாமல் குறட்டை விட்டுத் தூங்குகிறது.'

ஊர் என்று சொன்னாலும் அவளுக்குத் தோழியின் மேல்தான் கோபம். அவள் ஒருத்தியையாவது துணையாகக் கொண்டு இரவுப் பெருங்கடலை நீந்தலாம் என்று நம்பி யிருந்தவள் அவள். அந்தத் தோழியும் தூங்கிப் போனால் அவள் என்ன செய்வாள், பாவம்!

"இந்தப் பாழாய்ப்போன ஊர் இப்படித் தூங்குகிறதே! நான் என்ன செய்வேன்! அவர்களைப் போய்த் தலையால் முட்டி எழுப்பட்டுமா? அல்லது கழியை எடுத்து அடித்து எழுப்பட்டுமா? என்ன அக்கிரமம்! ஒரு பேதை தனியாகத் துயரக் கடலில் மூழ்கி அலமருகிறாளே என்ற இரக்கம் வேண்டாம்? ஓவென்று இரைந்து கூவி எல்லாரையும் எழுப்பிவிடட்டுமா? காரணம் இல்லாமல் கூவக்கூடாது. உரத்துக் கத்துகிறேன். எழுந்து வந்து, ஏன் இப்படிக் கத்தினாய் என்று கேட்டால், ஏதாவது ஒரு காரணம் சொல்லிக்கொள்கிறேன். திருடன் வந்தான் என்று சொல்கிறேன்; பாம்பு வந்தது, பயமாக இருந்தது என்று கூறுகிறேன்; பேய் வந்து பயமுறுத்தியது என்று சொல் கிறேன். அவற்றையெல்லாம் நம்பமாட்டார்கள் என்றால், வயிற்றுவலி தாங்க முடியவில்லையே என்று அலறுகிறேன். ஏதாவது காரணம், ஒரு பெற்றி மேல் இட்டு, கூவக் கூடாதா? என்ன செய்வது? ஒன்றும் தெரியவில்லையே!"

இப்படி அவள் சொல்வதாகப் பாடுகிறார் ஔவையார்.

> முட்டு வேன்கொல். தாக்கு வேன்கொல்?
> ஓரேன்; யானும்ஓர் பெற்றிமேல் இட்டு,
> 'ஆஅ ஒல்' எனக் கூவு வேன்கொல்?
> அலமரல் அசைவளி அலைப்பஎன்
> உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே!

[சுழன்று அசையும் காற்று வருத்த, என் வருத்தந் தரும் காதல் நோயைத் தெரிந்துகொள்ளாமல் கவலையின்றித் தூங்கும்

ஊரை, நான் போய்த் தலையாலே முட்டட்டுமா? கழி முதலிய வற்ருல் தாக்கட்டுமா? ஒன்றும் தெரியவில்லையே! ஏதேனும் ஒரு காரணத்தின்மேல் வைத்து, 'ஆ ஆ ஒல்' என்று கூவட்டுமா?

ஓரேன் - இன்னது செய்வதென்று அறியேன்; பெற்றி - காரணம்; சாக்கு; அலமரல் - சுழலுதல்; வளி - காற்று.]

# மாறன் களிறு

பெரிய போர் அது; பாண்டியனுக்கும் அவனுடைய பகைவர்களுக்குமிடையே எழுந்த போர். தேர்ப் படை, யானைப் படை, குதிரைப் படை, காலாட் படை என்று வகை வகையாகப் படை சிறந்து நிற்கிறது. வீரர்கள் தம் வீரத்தைக் காட்டுவது கிடக்கட்டும்; அந்தப் படையில் உள்ள யானைகளுக்குத்தான் எத்தனை அறிவு! அவற்றிலும், பாண்டிய மன்னனுடைய பட்டத்து யானை செய்யும் வீரச் செயல்கள் வியப்பிலும் பெரு வியப்பைத் தருகின்றன. போர்க் களத்தில் நிகழும் செயல்களைப் பார்த்தால் கதி கலங்குகிறது. ஆனால், இந்த யானையின் செயலோ பார்க்கப் பார்க்க வியப்பூட்டுவதாக இருக்கிறது.

பகைவர்களைச் சாய்த்துக் குத்துகிறது, தன் கொம்பி னால். களிற்றை எதிர்த்துக் கொல்வது பெரிய வீரம். மற்ற யானைகளை எதிர்ப்பதுபோல, இந்த யானையையும் எதிர்க்கிறார்கள், பகைப்படையில் உள்ள வீரர்கள். பாவம்! இதன் பெருமை அவர்களுக்குத் தெரியாதோ? அல்லது மறந்துதான் போனார்களோ? எதிரியின் படையில் ஒரு மன்னர் அல்ல, பல மன்னர்கள் இருக்கிறார்கள்; ஒருவ ருக்கு ஒருவர் துணையாக வந்தவர்கள். அவர்களை யெல்லாம் சாடிக் கலக்குகிறது யானை.

பாண்டியனது வீரச் செயலைப் பாடும் புலவர்கள், இந்த யானையின் விறலையும் பாட வேண்டுமென்று முந்துகிறார் கள். யானை பரிசில் கொடுக்கப் போகிறதா? இல்லை. ஆனா லும் வியப்புணர்ச்சி அவர்களைப் பாடும்படி உந்துகிறது.

யானை செய்த செயல்களை மனக்கண்ணிலே ஆற அமர நினைத்துப் பார்க்கிறார் புலவர். பாண்டியனைப் பகைத்த மன்னர்கள் யாவரும் போர்க்களத்தில் வீழ்கிறார்கள். யானை, தன் கொம்பினால் அவர்கள் மார்பைக் குத்துகிறது. அதற்குக்கூடத் தலையாய வீரம் இருக்கிறது. பகைவர்களின் முதுகில் குத்துவது வீரத்துக்கு இழுக்கு என்று அதற்குப் பழக்கத்தால் தெரிந்திருக்கிறது. அதன் கூர்மையான கொம்பு பகையரசர் மார்பில் அளைகிறது. புலவருக்கு இப்போது ஏடும் எழுத்தாணியுமே நினைவுக்கு வருகின்றன.

'நாம் கவி எழுதுவது போல இந்த யானையும் எழுதுகிறது!' என்று அவர் எண்ணினார். அவர் எழுதும் கவி பாண்டியனுடைய புகழைக் காட்டுவது. யானையும் அதையே செய்கிறதாம். பாண்டியனுடைய புகழை எப்படி எழுதுகிறது? பகை மன்னருடைய நாடுகளை யெல்லாம் இனிப் பாண்டியன் கைக்கொண்டான் என்று எழுதுகிறதாம். யானை தன் கொம்பையே எழுத்தாணியாகக் கொண்டு, பகையரசருடைய அகன்ற மார்பை ஓலையாக வைத்து, 'இந்த உலகம் முழுவதும் எங்கள் பாண்டியனுக்கு உரியது' என்று எழுதுகிறதாம். பாண்டியனோடு ஒட்டி உறவாடும் உணர்ச்சியால், 'வையகம் எல்லாம் எமது' என்று எழுதுகிறது. ஆம்! இனி அந்த யானையின் மேல் பாண்டியன் எல்லா இடங்களிலும் உலா வரலாம் அல்லவா?

புலவருக்கு ஏடும் எழுத்தாணியும் நினைவுக்கு வருவது இயல்புதானே?

மருப்புஊசி யாக மறங்கனல்வேல் மன்னர்
திருத்தகு மார்போலை யாகத்—திருத்தக்க
வையகம் எல்லாம் எமதென் றெழுதுமே,
மொய்இலைவேல் மாறன் களிறு.

[மருப்பு - கொம்பு; ஊசி - எழுத்தாணி; மறம் கனல் - வீரம் கனல்கின்ற; திருத்தகு - அழகினால் தகுதிபெற்ற; ஓலை - பனை ஏடு; திருத்தக்க - செல்வம் நிரம்பிய; மொய் இலை வேல் - வண்டுகள் மொய்க்கின்ற இலையை யுடைய வேலைப் பெற்ற; மாறன் - பாண்டியன்.]

★

இதோ மாறன் களிறு படுவேகமாக வருகிறது. அது வருகிற வேகத்தைப் பார்த்தால், இன்று போர்க்களம் முழுதும் பிணக்காடு ஆகிவிடும் என்று தோன்றுகிறது. இது யானையா? அல்ல, அல்ல; மலையும், கடலும், மேகமும், சண்டமாருதமும் சேர்ந்து, ஓருருவம் எடுத்து வருவது போல இருக்கிறது. அப்பா! என்ன பயங்கரமான தோற்றம்! பாண்டியன் திருவீதியில் உலா வருகையில் பொன்னும் மணியும் பூண்டு மெல்ல நடக்கும் களிறு இது? இதற்கு இத்தனை வீரம் எங்கிருந்து வந்தது? இதன் தோற்றத்தைப் பார்த்தால் மலைபோல இருக்கிறது. பெரிய மலை நாலு கால் படைத்து வந்தால் எப்படி இருக்குமோ, அப்படி இருக்கிறது. கடலே எழுந்து வருவது போல இருக்கிறது இதன் ஓசை. இப்போது இது மதம் பட்டிருக்கிறது. மதம் மழைத்தாரைபோலக் கட கட வென்று ஊற்றெடுத்துப் பொழிகிறது. வேகமோ சொல்லத்தர மன்று; கடுங்காற்றைப்போல வருகிறது.

இதன் ஆவேசப் போக்கைப் பார்த்தால், இது எத்தனை பேரைப் பலி வாங்குமோ தெரியாது. இது யானையா? இல்லை, இல்லை. கூற்றுவனுடைய வேற்றுருவம் போலும்! கூற்றுவன் கண்ணுக்குத் தெரியமாட்டானே! அவன் இப்படி ஒரேயடியாகப் பலரைக் கொல்லும் ஆற்றல் படைத்தவனா? அது ஐயத்துக்குரியது.

இந்தக் களிற்றைக் கண்டால் கூற்றுவனும் நாணுவான். 'இதற்கு இருக்கும் மிடுக்கு நமக்கு இல்லையே!'

என்று தலை கவிழ்வான். 'இந்த மிடுக்கில் ஒரு பகுதி நாம் கடன் வாங்கிக் கொள்ளலாமா?' என்று அவன் நினைப்பான். ஒரு பண்டத்தை அளவு குறித்து வாங்கிக் கொண்டு, பிறகு திருப்பிக் கொடுப்பது குடும்பங்களில் வழக்கம். அதைப் பழங்காலத்தில் குறியெதிர்ப்பை என்று சொல்வார்கள். கூற்றுவன் மாறனுடைய யானையி னிடம் சில காலம் அதன் வீரத்தைக் கடன் வாங்கிக் கொள்ள - குறியெதிர்ப்பை கொள்ள - நினைக்கிருனும்.

புலவர் இப்படி ஒரு வகையில் மாறன் களிற்றை வருணித்தார்.

> **தோற்றம் மலை;கடல் ஓசை; புயல்கடாம்;**
> **காற்றின் நிமிர்ந்த செலவிற்ருய்க்—கூற்றும்**
> **குறியெதிர்ப்பை கொள்ளும் தகைமைத்தே, எங்கோன்**
> **எறிகதிர்வேல் மாறன் களிறு.**

[புயல் கடாம் - மழையே அதன் மதம்; காற்றின் நிமிர்ந்த செலவிற்ருய் - காற்றைப் போல மோதி எழுந்த நடையை உடையதாய்; கூற்றும் - எமனும்; குறியெதிர்ப்பை கொள்ளும் - கடன் வாங்கிக் கொள்ளும்; எறிகதிர் வேல் - வீசுகின்ற சுடர் விடும் வேல்.]

★

**யா**னைக்கு இரண்டு கொம்புகள் உண்டு. இந்த யானை இரண்டு கொம்பாலும் ஒரு காரியத்தைச் செய்வதில்லை. ஒரு பக்கத்துக் கொம்பை அழுத்தி ஒன்றைச் செய்கிறது. மறு பக்கத்துக் கொம்பை அழுத்தி மற்றொரு வீரச் செயலைச் செய்கிறது.

பகையரசர்களுடைய ஊரின்மேல் பாண்டியன் படையெடுத்துச் செல்வான். அவ்வூரில் மதிலைக் காவல் செய்வார்கள். மதிற் கதவுகளை இறுகத் தாழிட்டுக் கணைய மரங்களைப் போட்டிருப்பார்கள். வீரர்களால் அதைத்

திறக்க முடியாது. யானைகளை மதிற் கதவின்மேல் மோத விடுவார்கள். அப்போது கதவின் தாழும் பிறவும் ஒடிந்து திறந்துவிடும்.

இங்கே, பல யானைகள் வேண்டும் என்பது இல்லை. இந்த யானை தன்னுடைய கொம்பால் மதிற்கதவைத் திறந்துவிடும். இரண்டு கொம்பால் கூட அன்று; ஒரு கொம்பாலேயே குத்திக் கதவைத் திறந்துவிடும். ஊருக்குள் புகும்போது ஒரு கொம்பைக் கொண்டு வீரங்காட்டிய அது, போருக்குள் புகும்போது மற்றொரு கொம்பைப் பயன்படுத்தும். பகையரசர்களுடைய மார்பை உழுவதற்கு அந்தக் கொம்பு கொழுவைப் போலப் பயன்படுகிறது.

இப்படி இது தன் இரண்டு கொம்புகளுக்கும் தனித் தனியே வேறு வேறு வீரச் செயலை வைத்துக் கொண்டிருக் கிறதாம்.

உருவத்தார்த் தென்னவன் ஓங்கெழில் வேழத்து
இருகோடும் செய்தொழில் தேரின்—ஒருகோடு
வேற்றூர் அகலம் உழுமே; ஒருகோடு
மாற்றூர் மதில்திறக்கு மால்.

[உருவத்தார் - அழகுடைய மாலையை; அணிந்த; தென்னவன் - பாண்டியன்; தேரின் - யோசித்தால்; வேற்றூர் அகலம் - பகைவருடைய மார்பை; மாற்றூர் - பகைவர்.]

★

மதிற் கதவின்மேல் பாய்ந்தும் மதிலையே தாக்கியும் அதன் கொம்பு தன் பளபளப்பை இழந்து நிற்கின்றன. வழு வழுப்பும் பளபளப்பும் உள்ளதாக இருக்கும் அந்தக் கொம்புகள், சுரசுரப்பாகச் சிறிதே மழுங்கி யிருக்கின்றன. மறுபடியும் பாகர்கள் அவற்றைச் செம்மைப் படுத்திவிடு வார்கள். இப்போது வீரன் தன் மெய்யிலே பட்ட புண் ணோடு நிற்பது போல இருக்கின்றன, கொம்புகள்.

பட்டத்து யானையாகிய அதற்கு ஒரு மனையாட்டி உண்டு. ஊர்வலம் வரும்போது, களிற்றின் அலங்காரத்தைக் கண்டு களிக்கும் இயல்புடைய பிடி அது; ஆண்மையின் அடையாளமாகிய கொம்புகளைக் கண்டு களிப்பது. தன் துதிக்கையினால் அவற்றைத் தடவித் தடவிப் பார்த்துப் பூரிக்கும்.

இப்போது சற்றே அழகிழந்த அந்தக் கொம்புகளோடு போய்ப் பிடி முன் நிற்க வேண்டுமே என்ற நினைவு களிற்றுக்கு வருகிறது. தன் கொம்புகளை மறைத்துக் கொண்டு செல்லவேண்டும் என்று எண்ணுகிறது. மறைப்பது எப்படி? பகை மன்னவருடைய குடர்களை அந்தக் கொம்புகளில் கோத்துக்கொள்கிறது. தன் வீரத்துக்கு அடையாளமாக அவை விளங்கும்; அதோடு, அழகிழந்த கொம்புகளையும் மறைக்கும். வீரச் செயல் முடிந்தவுடன் அதற்குப் பிடியின் நினைவும் காதலும் தோன்றுகின்றன. அதனால் இப்படிச் செய்கிறது.

> **அடுமதில் பாய அழிந்தன கோட்டைப்**
> **பிடிமுன்பு அழகழிதல் நாணி—முடியுடை**
> **மன்னர் குடரால் மறைக்குமே, செங்கனல்வேல்**
> **தென்னவர் கோமான் களிறு.**

[மதில்மேல் பாய, அதனால் அழிந்தனவாகிய கொம்புகளை; முடியுடை மன்னர் - முடியையணிந்த சோழ சேர மன்னர்கள்.]

★

**போர்**க்களம் இப்போது பிணக்காடாகக் காட்சி அளிக்கிறது. பாண்டியன் வெற்றி கொண்டான். பகையரசர் போரிலே பட்டனர். அவர்களுடன் வந்த வீரர்களும் அழிந்தனர். வீரம் கனன்ற போர்க்களத்தில் இப்போது ஒரே அழுகை. இறந்துபோனவர்களின் மனைவிமார் வந்து புலம்புகிறார்கள். சிறந்த கற்புடைய மங்கையர் எரி

வளர்த்துத் தம் கணவர் சென்ற இடத்துக்குப் போக முந்துகின்றனர். அவர்கள் எரி மூழ்குவதைத் தன் கண்ணால் காணச் சகியாத பாண்டியன், தன் மேலாடையால் கண்ணை மூடிக்கொள்கிறான். போர்க்களத்தில் ஆண்மை நலங் காட்டிப் போரிட்ட மன்னர்கள் பலம் இழந்து சாய்வதைக் கண்டு அவன் இரங்கவில்லை. ஆனால், இப்போது இம் மகளிர் எரி மூழ்குவதைக் கண்டு மனம் இரங்கிக் கண்ணை மறைத்துக்கொள்கிறான்.

அவன் இரங்குவது பெரிதன்று. அவன் யானை என்ன செய்கிறது? அது எத்தனை நுட்பமான உணர்ச்சியை உடையது!

போரில் வீரர்கள் பட்டது மாத்திரம் அன்று; பகையரசர் யானைகள் பலவும் பட்டன. அந்த யானைகள் அமைதியான வாழ்வு நடத்தும்போது, அவற்றிற்கு இன்பம் நல்கப் பிடிகள் இருக்கின்றன. அந்தப் பிடிகள் இப்போது அங்கே வந்து புலம்புகின்றன. பகையரசர் ஊரில் வந்து அஞ்சாமல் போர் செய்தான் பாண்டியன். பகைவன் நாட்டுப் போர்க்களமாக இருந்தது அது. இப்போது வழுதி அந்தக் களத்தைத் தன்னதாக்கிக் கொண்டான்.

போர்க்களத்துக்கு அப்பால் இருந்த யானைப் பந்தியில் பிடிகள் இருந்தன; அவை இப்போது போர்க்களத்துக்கு வந்து களிறுகள் மாண்டு கிடப்பதைப் பார்க்கின்றன; துயரம் தாங்காமல் புலம்புகின்றன.

பகையரசர்களின் மனைவிமார் எரி மூழ்குவதைக் காணப்பொறாத பாண்டியன் தன் ஆடைத் தலைப்பால் கண்ணை மூடிக்கொண்டது போல, அவனுடைய களிறும் பகையரசர் பிடிகளின் வருத்தத்தைக் காணமாட்டாமல் தன் கண்களை மூடிக்கொண்டது; துதிக்கையால் கண்களைப் புதைத்துக்கொண்டதாம். அதற்கும் மனம் இரங்குகிறது.

ஏனைய பெண்டிர் எரிமூழ்கக் கண்டுதன்
தானையால் கண்புதைத்தான் தார்வழுதி;—யானையும்
புல்லார் பிடிபுலம்பத் தன்கண் புதைத்ததே
பல்யானை அட்ட களத்து.

[ஏனைய - மற்ற; தானை - ஆடை; புதைத்தான் - மூடிக்கொண்டான்; புல்லார் - பகைவர்களுடைய; அட்ட - கொன்ற.]

# அரசன் உலா

அரசன் உலா வரப் போகிறான் என்பதை முரசறைந்து தெரிவித்தார்கள். ஊர் முழுவதும் அலங்கரித்திருக்கின்றனர். வீதிதோறும் தோரணம், பந்தல், கொடிகள். கமுகங்குலையும் தெங்கின் குலையும் தொங்கவிட்டு, மலரும் மாலையும் நிறைகுடமும் விளக்கும் எடுத்து, இந்த உலாவைப் பெருவிழாவாகக் கொண்டாடுகிறார்கள் மக்கள். எங்கே பார்த்தாலும் மகிழ்ச்சி ஆரவாரம்.

அரசன் பேரழகன்; அவன் அழகைவிடப் பின்னும் சிறந்தது அவன் வீரம். அவன் மார்பகலமும் தோளுயரமும் கட்டழகுடைய பருவ மங்கையரின் உள்ளத்தைப் பிணிக்கும் தன்மையுடையன. அவன் அழகைக் கண்ட மங்கையர் பிறிதொன்றை அவாவாமல், அதுவே நினைவாகக் கிடப்பார்கள்; இது ஊர் அறிந்த உண்மை.

அரசன் உலா வரும்போது அவரவர்கள் தங்கள் தங்கள் வீட்டை அணி செய்து வைக்கின்றனர். வாயிற் கதவைத் திறந்து, மங்கலப் பொருள்களை வாயிலில் வரிசையாக வைக்கின்றனர். தம் அரசனுடைய வீரத்திலும் வெற்றி மிடுக்கிலும் பெருமிதங்கொள்ளும் குடி மக்களுக்கு, அவனுடைய காட்சி அளவற்ற இன்பத்தைத் தருவதல்லவா?

ஒரு வீட்டில் அழகு நிரம்பிய கன்னி ஒருத்தி இருக்கிறாள். அவள் அரசனுடைய பேரழகைப் பற்றிக் கேள்வியுற்றிருக்கிறாள். தன்னுடைய உள்ளத்தே கற்பனையினால் அவனுடைய உருவத்தைக் கண்டு களிக்கின்றவள். அவள் மனம் கட்டுக்கடங்காமல் அரசனையே நினைத்துக்

கொண்டிருக்கிறது. 'அவன் அரசன்; நாம் குடிமக்களுள் ஒருத்தி. அவனைக் காதலிக்க நமக்கு உரிமையும் இல்லை; தகுதியும் இல்லை' என்று அந்தப் பேதை எண்ணவில்லை. உணர்ச்சி பொங்கும்போது இவ்வாறெல்லாம் ஆராய் வதற்கு வாய்ப்பு இராது.

இது நிகழ்கின்ற இடம் உறையூர். சோழ அரசன்மீது அந்த இளம் பெண் காதல் கொண்டிருக்கிறாள். தன் அகத்தே உருவெழுதிப் பார்க்கும் உறந்தையர்கோன் இன்று திருவீதியில் உலா வரப் போகிறான்என்பதை அறிந்த போது, அவளுக்குத்தான் எத்தனை இன்பம்! ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு யுகமாக இருக்கிறது. அவனைத் தன் கண்ணாரக் கண்டு நெடுநாளைய ஆவலைப் போக்கிக் கொள்ள வேண்டுமென்று அவள் காத்திருக்கிறாள்.

நாம் நினைக்கிறபடியே எல்லாம் நடந்தால் இந்த உலகமே சொர்க்கமாகிவிடும். அப்படித்தான் நடக்கிற தில்லையே! அந்த இளம்பெண்ணின் ஆசையை ஒருவாறு அவளுடைய தாய் அறிவாள். தன் தோழிமாரோடு அப் பெண் சில சமயங்களில் சோழனைப்பற்றி ஆர்வத்தோடு பேசுவதைக் கேட்டிருக்கிறாள். 'இந்தப் பெண் என்ன, அரச குலத்தில் பிறந்தவளைப் போலவும் பெருஞ் செல்வர் பெண்ணைப்போலவும் கனவு காண்கிறாளே! இவளுக்கு அழகு மட்டும் இருந்தால் போதுமா? அரசன் எங்கே, இவள் எங்கே? இவள் ஆசைக்கும் அளவு வேண்டாமா?' என்று நினைத்ததுண்டு. ஆசைக்கு ஓர் அளவு இல்லை என்பது அவள் அறியாததா?

தன் மகளின் உள்ளத்தே சோழன்மேல் ஆசை வளர் கிறதை அவள் ஊகித்துக்கொண்டாள். 'எட்டாப் பழத் துக்குக் கொட்டாவி விடுகிறாளே' என்று அங்கலாய்த் தாள். 'அடி பாவிப் பெண்ணே! நீ என் வயிற்றில் பிறந் தாயே!' என்று இரங்கினாள்.

இளநங்கையின் காதலுக்கு இந்த நியாயம் எல்லாம் தெரியவில்லை. அவள் தன் உள்ளத்தே காதலை வளர்த்துக் கொண்டு வந்தாள்.

ஓரிரண்டு சமயங்களில் தாய் அவளைக் குறிப்பாகக் கண்டித்தாள். "பேதைப் பெண்ணே, விரலுக்குத் தகுந்த படிதான் வீங்கவேண்டும். வீணே பகற்கனவு கண்டு பொழுது போக்காதே. அவரவர்களுக்கு ஏற்ற நிலையில் இருந்தால் எப்போதும் நன்மை உண்டு" என்று அறிவுரை கூறினாள்.

மகளுக்குத் தாய் கூறுவனவெல்லாம் தெளிவாக விளங்கின. அவள் அறிவுடையவளாதலின் தன் நிலையை யும் சோழன் நிலையையும் நன்கு தெளிந்தாள். ஆனாலும், காதல் என்னும் உணர்ச்சிக்கு இந்தப் பாகுபாடு புரிவதே இல்லை. எத்தனை தடை நேர்ந்தாலும், மேலும் மேலும் கிளர்ந்தெழும் தீயைப் போன்றது அது.

இன்று சோழன் உலா வரப்போகிறான். இந்தச் செய்தி காதில் விழுந்தவுடன் இளநங்கையின் உடம்பு ஒரு சுற்றுப் பூரித்துவிட்டது. அவள் முகத்தில் ஒரு புது மலர்ச்சி; கண்களில் ஒரு புதிய ஒளி; பேச்சில் ஒரு தனிச் சிறப்பு; நடையில் ஒரு மிடுக்கு.

தாய் அவள் நிலையைக் கூர்ந்து நோக்கினாள். 'இந்தப் பெண் உணர்ச்சி வசத்தால் வீதியிலே வந்து ஏதேனும் உளறிவிடுவாளோ?' என்ற அச்சம் அவளுக்கு உண்டாகி விட்டது. பெண்டிருக்கு உயிரைவிடச் சிறந்தது நாணம். இவ்வளவு காலம் அவள் தன் உள்ளத்தே வளர்த்து வந்த காதல் இன்று அதற்கு உரியவனைக் கண்டால் நாண மென்னும் விலங்கைத் தகர்த்துக் கட்டவிழ்ந்து போனால் என்னாகும்? இதை நினைக்கையில் அன்னைக்கு அச்சம் பெரிதாயிற்று. இந்த ஏதம் வராமல் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்று உறுதி பூண்டாள்.

ஊரெல்லாம் அரசன் பவனியைக் கண்டு ஆரவாரத்தோடு வரவேற்று விழாக் கொண்டாட ஏற்பாடு செய்து கொண்டிருக்க, அவள் மட்டும் இந்த விழாவில் கலந்து கொள்ளாமலே இருந்துவிடுவதென்று முடிவு கட்டிவிட்டாள். ஊரார் அது கண்டு பழிக்கலாம். ஆனால், தன் மகளுடைய அவல நிலை வெளிப்பட்டுப் போனால் அப்பொழுது உண்டாகும் பெரும் பழிக்கு இது எவ்வளவோ குறைவல்லவா? அதனால், எந்த அரசன் எந்தப் பட்டணம் போனாலும் தன் வீட்டுக் கதவை அடைத்துக்கொண்டு, தன் மகளை உள்வைத்துக் காவல் புரிவதே தன் கடமை என்று அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

அங்கே அரசன் பவனிக்கு ஏற்பாடு ஆகிறது. இங்கே அவன்மேல் காதல் கொண்ட அணங்கின் சிறைக்கு ஏற்பாடாகிறது.

அந்தப் பெண்ணின் தோழிக்கு அன்னையின் எண்ணம் ஒருவாறு புலனாயிற்று. வீட்டில் ஓர் ஆரவாரத்தையும் காணவில்லை. அலங்காரம் ஒன்றும் செய்யவில்லை. அதற்குக் காரணம் என்னவென்று விசாரிக்கும்போது அவளுக்கு அன்னையின் கருத்துத் தெரிந்தது.

நெடுந்தூரத்தில் முரசுகள் முழங்கின. அந்த ஒலி இங்கே கேட்டது. இசைக் கருவிகள் இயம்பின. அந்த இளம் பெண் தன்னை அலங்கரித்துக் கொண்டாள் அதைக் கண்டு அன்னைக்கு அச்சம் மிகுதியாயிற்று. "எதற்காக இந்த அலங்காரம்?" என்று கேட்டாள்.

"அரசர் வருகிறாரே! திருவீதியில் வரும்போது போய்க் காணலாம் என்று நினைக்கிறேன்."

"போடி, வெட்கங் கெட்டவளே! கல்யாணமாகாத கன்னிப் பெண் வீதியில் போகிறாளாம்! வீதியிலே போகிறவனைப் பார்க்கப் போகிறாளாம்!"

"நீ என்ன அம்மா சொல்கிறாய்?"

"சொல்ல வேண்டியதைத்தான் சொல்கிறேன். உன் திருட்டுப் புத்தி எனக்குத் தெரியும். அரசர் பவனியை நீ பார்க்கக் கூடாது. வீதியிலே போய் நின்று பித்துப் பிடித்தவளைப் போல நீ பார்க்க, உன்னை நாலு பேர் பார்க்க நாளைக்கு என் மண்டைதான் உருளும். நீ வீட்டுக் குள்ளேயே அடைந்து கிட."—இப்போது அன்னை சினத் துடன் பேசினாள்.

"நான் வீதிக்கு வரக் கூடாதா அம்மா?"

"கூடாது."

"அப்படியானால் நம் வீட்டு வாயிற்படியில் இருந்த படியே பார்க்கிறேனே!"

"அதுவும் கூடாது!"

"கதவின் ஓரத்தில் நின்றபடியே கண்டு களிக்கக் கூடாதா?"

"கண்டு களிப்பது என்ன? நீ சிறு குழந்தையா, வேடிக்கை பார்க்க? நான் கதவைச் சார்த்தித் தாழ் போட்டு விடப் போகிறேன். பவனிக் கூட்டம் வீதியை விட்டுப் போன பிறகுதான் கதவைத் திறக்கப் போகிறேன்."

"என்ன அம்மா சொல்கிறாய்? கொடுமையான பேச்சாக இருக்கிறதே!"

"கொடுமையல்லவடி, பெண்ணே! இது என் கடமை!"

"ஐயோ கடமையே!" என்றாள் நங்கை. அவளால் மேலே பேச முடியவில்லை. அவள் உயிர்த் தோழி அவள் அருகே இருந்தாள்.

அன்னை அவளைக் கவனிக்கவில்லை; அவளிடம் பேச்சுக் கொடுத்தால் ஒருகால் தன் மனம் நெகிழ்ந்து விடுமோ என்ற அச்சம். கதவைத் தாழிட்டாள். அதனருகே ஓர்

ஏவலளைக் காவல் போட்டாள். தன் வேலையைப் பார்க்கப் போய் விட்டாள்.

வெளியில் பவனி ஆரவாரம் மிகுதியாயிற்று. அரசன் இந்த வீதிக்கு வந்து விட்டான் என்று தெரிந்தது. வர வர ஒலிகள் மிகுதியாயின. இங்கே இந்த இள நங்கை துடித்தாள். கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லையே என்று புலம்பினாள். அவள் தோழி ஏதேதோ ஆறுதல் சொன்னாள். கணத்துக்குக் கணம் அந்த நங்கையின் சோகம் அதிகமாயிற்று. பேசினவள் இப்போது பேச முடியவில்லை; கண்ணைச் செருகியது மயக்கம். அவள் நிலையைக் கண்டபோது தோழிக்கு ஒன்றுமே தோன்ற வில்லை. அவள் உயிருக்கே ஆபத்து வந்துவிட்டதோ என்று அஞ்சினாள். 'இந்தப் பைத்தியக்கார அன்னை இவள் உடலைக் காவல் புரியலாம்; இவள் உயிருக்குக் காவல் போட முடியுமா?' என்று எண்ணினாள். இனித் தாமதித்தால் அந்த இள நங்கையை உயிருடன் காண முடியாது என்பது தெளிவாயிற்று.

அவளை அப்படியே விட்டு விட்டு அன்னையிடம் ஓடினாள். தன் தோழியின் உயிருக்கு மருந்து இன்ன தென்று அவளுக்குத் தெரியும். அதை உடனே செய்ய வேண்டுமென்று ஓடினாள். தலையில் தீப் பிடித்துக் கொண்டால் உடனே அருகில் உள்ள தண்ணீரை ஊற்றி அவிக்க வேண்டியதுதானே? அந்தத் தண்ணீர் அழுக்கு என்ற ஆராய்ச்சிக்கு அப்போது இடம் ஏது?

ஓடினாள் தோழி. "ஆபத்து! ஆபத்து! உடனே கதவைத் திறந்து விடுங்கள்" என்று அன்னையிடம் கத்தினாள்.

"திறந்தால்தானே ஆபத்து?" என்று அவள் கூவினாள்.

"அந்த ஆபத்தைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இப்போது திறவுங்கள். இல்லாவிட்டால் இந்தப் பெண்

னுக்கு ஏது வருமோ, அறிகிலேன். அப்புறம் அடித்துப் புரண்டு அழுதாலும் உயிர் வராது" என்று அந்தச் சிறுமி துடிதுடித்துக் கத்தினாள்.

"என்ன!" அன்னைக்கு ஒன்றும் தோன்றவில்லை.

"உறந்தையர் கோனை இவள் கண்ணாரக் காண வேண்டும். திறவுங்கள் உடனே, கதவை. மற்றவற்றைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம். இவள் இறந்து விட்டால் பிறகு உண்டாகும் துயரம் பெரியது. தாமதம் வேண்டாம்."

அந்தத் தோழி கூறுவதாக முத்தொள்ளாயிரத்தில் ஒரு பாட்டு வருகிறது.

> **திறந்திடுமின்! தீயவை பிற்காண்டும்! மாதர்**
> **இறந்து படிற்பெரிதாம் ஏதம்;—உறந்தையர்கோன்**
> **தண்ணார மார்பின் தமிழ்நர் பெருமானைக்**
> **கண்ணாரக் காணக் கதவு.**

[தீயவை-திறப்பதனால் உண்டாகும் தீங்குகளை; பின்காண்டும்-பின்னாலே பார்த்துக் கொள்வோம்; மாதர் - பெண்; ஏதம் - துன்பம்; (ஏதம் பெரிதாம்.) உறந்தையர் கோன் - சோழன்; தண்ணார மார்பின்-குளிர்ந்த சந்தனத்தைப் பூசிய மார்பையுடைய; தமிழ்நர் பெருமானைக் கண்ணாரக் காணக் கதவு திறந்திடுமின் என்று சேர்க்க வேண்டும்.]

பாட்டு, தோழியின் படபடப்பையும் கவலையையும் எடுத்துக் காட்டும் வகையில் அமைந்திருக்கிறது. 'திறந்திடுமின்!' என்ற சொல்லை முதலில் வைத்தது அவளுடைய வேகத்தை மிகச் சிறப்பாகப் புலப்படுத்துகிறது.

## 2

**வஞ்சி** மாநகரம் சேரனது இராசதானி. அங்கேயும் அரசன் உலா வரப் போகிறான். அவனுடைய பேரழகைக் காதால் கேட்ட மடமங்கை ஒருத்தி இன்று கண்ணாலே கண்டு இன்புறலாம் என்று ஆர்வம் கொண்டிருக்கிறாள்.

அவளுடைய அன்னையும் தன் வீட்டுக் கதவை அடைத்து வைக்கத் திர்மானிக்கிருள். ஆனால், அந்த மட மங்கை சற்றே துணிவுடையவள்.

தாய் கதவை அடைத்துவிட்டு உள்ளே போய் ஏதோ வேலை பார்த்தாள். மகள் மெல்ல வந்து கதவைத் திறந்து விட்டாள். சிறிது நேரம் கழித்து அன்னை வந்து பார்த்தாள். கதவு திறந்திருப்பது கண்டு மறுபடியும் அடைத்துத் தாழிட்டாள். மறு முறையும் மகள் அதைத் திறந்து விட்டாள்.

தாய்க்கு மகளைச் சினக்க மனம் இல்லை. தன் சினத்தைக் கதவின்மேல் காட்டினுள்; மீண்டும் கோபத்தோடு அதை அடைத்தாள். மகள் மீண்டும் அவள் போனவுடனே திறந்து விட்டாள்.

பழங் காலத்தில் கதவின் நிலையோடு இரண்டு ஓரத்தின் இரு முனையிலும் இணைந்த குடுமிகள் இருக்கும். அவற்றை மேலும் கீழும் உள்ள துளைகளில் பொருத்தி யிருப்பார்கள். தாயும் மகளும் அடைப்பதும் திறப்பது மாக இருப்பதனுல் அந்தக் கதவின் குடுமிகள் தேய்ந்து போகின்றனவாம்.

சேரமான் உலா வரும் வீதியில் இப்படிக் குடுமி தேய்ந்த கதவுகள் பல உண்டு என்று புலவர் பாடுகிருர்.

**தாயர் அடைப்ப, மகளிர் திறந்திடத்**
**தேயத் திரிந்த குடுமியவே!—ஆய்மலர்**
**வண்டுலாஅம் கண்ணி வயமான்தேர்க் கோதையைக்**
**கண்டுலாஅம் வீதிக் கதவு.**

[ஆராய்ந்த மலரினுல் கட்டியதும் வண்டுகள் வந்து திரிவது மாகிய கண்ணியை உடையவன், வலிமையைப் பெற்ற குதிரை பூட்டிய தேரையுடையவனுகிய சேரனைக் கண்டு, மக்கள் உலவுகிற வீதியிலுள்ள கதவுகள், தாய்மார்கள் அடைக்கவும் அவ

பெண்கள் திறக்கவும் தேய்வு பெற்று மாறிய குடுமிகளை உடையன வாயின.

கண்ணி - தலையில் அணியும் மாலை; வயமான் - வலிமை யுள்ள குதிரை; கோதை - சேரன்.]

## 3

இந்தப் பெண் மதுரையில் வாழ்கிறவள். பாண்டியன் உலா வரப் போகிறான். இவளுடைய தாயும் காவல் காக்கும் இயல்புடையவள். ஆனால், இந்தப் பெண் முதலில் சொன்னவளைப் போல உணர்ச்சியிலே ஆழ்ந்து மயக்கம் போட்டு விழுகிறவள் அல்ல. வஞ்சிமா நகரத்துப் பெண்ணைப் போன்ற துணிச்சற்காரியும் அல்ல. தன் தாயின் சொல்லை மீறுவதற்குத் துணிவு இல்லாதவள். பாண்டியன் பேரழகைக் காணவேண்டும் என்ற ஆசைக்கு அணை போடவும் இயலாதவள். கதவைத் திறக்கவும் கூடாது; பாண்டியனைப் பார்க்கவும் வேண்டும். இதற்கு என்ன வழி?

நாலு பேர் காணத் தன் பெண் நடு வீதியில் நின்று பாண்டியனைக் கண்டு உணர்ச்சி வேகத்தில் தன் நிலையைப் பிறர் அறியச் செய்து விடக்கூடும் என்று அஞ்சியே, அவள் தாய் அவளை வீதியிற் செல்லலாகாது என்று தடுத்துக் கதவைத் தாழிட்டுக்கொண்டாள். "இந்தா, கதவைத் திறக்கக்கூடாது. வீட்டுக்குள்ளேயே இரு; தெரிகிறதா?" என்று அச்சுறுத்தினாள். "அப்படியே இருக்கிறேன்" என்று அந்தப் பெண் சொன்னாள்

பாண்டியன் உலா வந்தான். அந்தப் பெண் தன் ஆவலை நிறைவேற்றிக்கொண்டாள். அவள் அறிவு நுட்பம் உடையவள். தன் தாயின் விருப்பத்தின்படியே நடந்துகொண்டாள்; வீட்டுக்கு வெளியே போகவில்லை; கதவையும் திறக்கவில்லை. ஆனால், தன் விருப்பத்தையும் பூர்த்தி செய்துகொண்டாள். எப்படி?

பழங்காலத்தில் கதவுகளுக்கு வெளியே பூட்டிடுவ தில்லை. உள்ளே தாழ் இருக்கும். வெளியிலே போனால் ஒரு தாழக்கோலைக் கொண்டு கதவிலுள்ள துவாரத்தின் வழியே உள்ளேயுள்ள தாழைத் தூண்டிப் போட்டு விடுவார்கள். வெளியிலிருந்து கதவுத் துளையிலிட்டுத் தாழைப் போடுவதனால்தான் அதற்குத் தாழக்கோல் என்று பெயர் வந்தது. அது பின்பு 'தாக்கோல்' என்று மருவியது.

தாழக்கோலை விட்டுப் பூட்டவும் திறக்கவும் வாய்ப் பான துளை ஒன்று கதவில் இருக்கும்.

மதுரைப் பெண், பாண்டியன் பவனி வந்தபோது, அந்தக் கதவுத் துளை வழியே அவனையும் அவன் கோலத் தையும் கண்டு இன்புற்றாள்.

இப்போது பாண்டியன் வீதியைக் கடந்து போய் விட்டான். அன்னை கதவைத் திறந்துவிட்டாள். தோழி ஒருத்தி அந்த மங்கையிடம் வந்து, "என்ன அழகான ஊர்வலம்! நீதான் காண முடியவில்லை" என்று வருத்தம் காட்டினாள்.

"நானும் கண்டேன். பாண்டியன் பேரழகைக் கண் களால் மொண்டு உண்டேன்" என்றாள் அந்த அழகி.

"அன்னை பார்க்கலாம் என்று சொல்லிவிட்டாளா?" என்று வியப்புடன் கேட்டாள் தோழி.

"இல்லை, இல்லை; கதவு அடைத்துத்தான் இருந்தது. ஆனாலும் நான் கண்டு கண்குளிர்ந்தேன்."

"எப்படிக் கண்டாய்?"

"அந்தக் கதவைப் பண்ணினாரே, அந்தப் பெருமகனா ருக்கு நான் மிகவும் கடன்பட்டிருக்கிறேன்!"

"அவரைப் பற்றிய நினைவு இப்போது எதற்கு?"

"பாண்டிய மன்னனுடைய நன்னலம் காணும்படியாக அந்தக் கதவில் ஒரு துளையிட்டு வைத்தாரே, அவருக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!"

தோழிக்கு உண்மை விளங்கி விட்டது.

பாண்டியனைக் கண்டு இன்புற்ற மங்கை சொல்வதை முத்தொள்ளாயிரம் நமக்குச் சொல்கிறது.

காப்புஅடங்கென் றன்னை கடிமனை இற்செறித்து
யாப்படங்க ஓடி அடைத்தபின்—மாக்கடுங்கோன்
நன்னலம் காணக் கதவம் துளைதொட்டார்க்கு
என்னைகொல் கைம்மா றினி!

[இந்தக் காவலுக்குள் அடங்குவாயாக என்று என் தாய் காவலை யுடைய இந்த வீட்டுக்குள்ளே என்னை இருக்கச் செய்து, தாழ் முழுவதையும் செறித்து ஓடிக் கதவை அடைத்த பிறகு, வேக மான குதிரையை யுடைய பாண்டியனது நல்ல அழகை நான் காணும்படி, இந்தக் கதவில் துளையைத் துளைத்தவருக்கு நான் செய்யும் கைம்மாறு என்ன?

கடிமனை - காவலை யுடைய வீடு; யாப்பு - கட்டும் கருவி; இங்கே தாழ்; மா - குதிரையை யுடைய; கடுங்கோன் என்பது பாண்டியன் பெயர்; துளை தொட்டார்க்கு - துளையைத் துளைத் தவருக்கு.]

அவளுடைய அன்னை, 'ஐயோ, பாண்டியன் வரு கிறானே! என் பெண்ணுக்கு என்ன தீங்கு வந்து விடுமோ!' என்று அஞ்சி ஓடிப் போய்க் கதவை அடைத்தாளாம். 'யாப்படங்க ஓடி அடைத்தபின்' என்பது அந்த வேகத் தைக் காட்டுகிறது.

# குன்றக் குரவை

சிலப்பதிகாரத்தின் மூன்ருவது காண்டம் சேர நாட்டு நிகழ்ச்சிகளைக் கூறுவது. வஞ்சி மாநகரில் சேரன் செங்குட்டுவன் பத்தினித் தெய்வமாகிய கண்ணகிக்குத் திருக்கோயில் எடுத்த வரலாற்றை இக் காண்டம் தலைமைச் செய்தியாகக் கொண்டிருப்பதனுல் இதற்கு வஞ்சிக் காண்டம் என்ற பெயர் அமைந்தது. இதில் குன்றக் குரவை முதல் வரந்தரு காதை இறுதியாக ஏழு காதைகள் இருக்கின்றன. பத்தினியாகித் தன் வீரத்தைப் புலப் படுத்திய கண்ணகியை மதுரைக் காண்டம் காட்டுகிறது. கோபம் மறைந்து வீரம் அடங்கி அருள் மீதூர்ந்த பத்தினித் தெய்வத்தை வஞ்சிக் காண்டம் காட்டுகிறது.

காண்டத்தின் தொடக்கமே வழிபாட்டோடு தொடங்குகிறது. முருகனையும் அப்பால் கண்ணகியையும் மலைநாட்டுக் குறவர்கள் வழிபடும் செய்தியை, குன்றக் குரவை என்ற முதற்காதை சொல்லுகிறது. தெய்வ வரலாற்றுக் காண்டம் வழிபாட்டோடு தொடங்கி வரந் தருவ தோடு நிறைவேறுவது பொருத்தந்தானே?

இப்பகுதியில் 'உரைப் பாட்டு மடை' என்ற முதற் பாட்டு 22 அடிகளில் முன்காண்டத்தோடு கதையைத் தொடர்புபடுத்திச் சொல்கிறது. பிறகு குரவைக் கூத்துக் குரிய பாடல்கள் வருகின்றன.

மலையிலே குருவிகளை ஓட்டியும் கிளிகளை ஓட்டியும் அருவியிலே ஆடியும் சுனையிலே மூழ்கியும் இளைப்புற்ற குறமகளிர் நெடுவேள் குன்றத்தின் சாரலில் வந்து கொண் டிருந்தனர். அவர்கள் அம் மலையிலுள்ள வேங்கை மரத் தின் நிழலில் ஒற்றை நகிலோடு நின்ற கண்ணகியைக் கண்

டனர். அவளைப் பார்த்தபோது அவர்கள் உள்ளத்தில் பக்தி பிறந்தது. தங்கள் குலத்தில் உதித்துத் தெய்வமாகிய வள்ளி நாச்சியாரைப் போலத் தோற்றியது. உடனே அவளை அணுகி, "வள்ளி போல்வீர், கண்டார் உள்ளம் நடுங்கும்படியாக ஒரு நகில் இழந்து வந்து நின்ற நீர் யார்?" என்று கேட்டனர்.

மதுரையை எரித்தபோது கனற் பிழம்பாக நின்ற கண்ணகி, இப்போது அந்தச் சினத்தின் சுவடே இன்றி, யாவும் ஊழ்வினையால் விளைந்தவை என்ற தெளிவோடு நின்றாள். ஆதலின் சிறிதும் முனிவை அடையாமல், "வலிய ஊழ்வினை வந்து கடிய விளைவை உண்டாக்கிய போது மணம் நிறைந்த மதுரையோடு அதன் அரசனும் கெட, கணவனை அந்நகரில் இழந்து இங்கே வந்த கடிய வினையை உடையேன்" என்று கூறினாள்.

அதைக் கேட்ட மலை வாழ் மகளிர் அவளை வணங்கி அச்சத்துடன் கைகளைக் கூப்பி நின்றார்கள். அப்போது குன்றில் வாழ்பவர் யாவரும் கண்டு நிற்க, வானவர் பூமாரி பெய்து கோவலனை அழைத்துச் செல்பவர், இவளையும் அவனோடு கொண்டு போயினர். யாவரும் வியப்படைந்து, "இவள் கண்கண்ட தெய்வம். நம் குலத்துக்கு இவளைப் போலப் பெரிய தெய்வம் வேறு இல்லை. மலையிலுள்ள சிறு குடியில் உள்ளவர்களே, வேங்கை நிழற் கீழ் நின்ற பத்தினித் தெய்வத்தைப் போற்றுங்கள். குறிஞ்சி நிலத்துக்குரிய தொண்டகப் பறையையும் சிறு பறையையும் முழக்குங்கள். கொம்பை ஊதுங்கள். மணியை அடியுங்கள். குறிஞ்சிப் பண்ணைப் பாடுங்கள். நறும்புகை புகையுங்கள். பூவினால் அர்ச்சனை செய்யுங்கள். கோயில் அமையுங்கள். புகழ்ந்து மலர் தூவுங்கள். இந்தப் பெருமலை வளஞ் சுரப்பதாக என்று இந்த நங்கைக்குப் பூசை நிகழ்த்துங்கள்" என்றார்கள்.

மகளிர் பாடிக் கொண்டே மலையருவியில் ஆடினார்கள். அகத் துறையமைந்த பாடல்களைப் பாடினர். பிறகு முருகனைப் பாடிக் குரவை யாடலாயினர். அப்படி ஆடுகையில் முருகனைப் பாராட்டி மூன்று பாடல்களைப் பாடுகிறார்கள்.

முருகனுடைய வேலைப் பாராட்டும் பாடல்களாக அவை அமைகின்றன. முதற்பாட்டில் முருகன் எழுந்தருளி யிருக்கும் செந்தில், செங்கோடு, வெண்குன்றம், ஏரகம் என்ற தலங்களைச் சொல்லி, கடலில் மறைந்த சூரனாகிய மாமரத்தை முருகன் வேல் அழித்தது என்று பாடுகின்றனர்.

சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேல்அன்றே,
பார்இரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மாத் தடிந்த சுடரிலைய வெள்வேலே!

அடுத்த பாட்டில் முருகனுடைய ஆறுமுகங்களையும் பன்னிரண்டு திருக் கைகளையும் பாடி, பிணிமுகம் என்னும் யானையின் மீது ஏறிச்சென்று வேலால் அவுணர்களை, இந்திரன் ஏத்தும்படியாகக் கொன்றதைப் பாடுகிறார்கள்.

அணிமுகங்கள் ஓராறும் ஈராறு கையும்
இணையின்றித் தான்உடையான் ஏந்தியவே லன்றே,
பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்
மணிவிசும்பிற் கோன்ஏத்த மாறட்ட வெள்வேலே!

மூன்றாவது பாட்டில் முருகன் சரவணப் பொய்கையில் தாமரையே பள்ளிக் கட்டிலாகவும் அப்பொய்கையே பள்ளி யறையாகவும் கிடந்து, கிருத்திகை மாதர் அறுவருடைய பாலை உண்ட செய்தியும், சூரனுடைய மார்பையும் கிரௌஞ்சாசுரனாகிய மலையையும் முருகன் வேல் அழித்த செய்தியும் வருகின்றன.

சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மார் அறுவர்
திருமுலைப்பால் உண்டான் திருக்கைவேல் அன்றே,
வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
குருகு பெயர்க்குன்றம் கொன்ற நெடுவேலே!

தெய்வத்தைப் பரவிப் பாடும் பாடல்கள் முடிந்த பின்பு அறத்தொடு நிற்றல் என்னும் துறையில் அமைந்த பாடல்கள் வருகின்றன.

களவுக் காதலில் ஈடுபட்ட ஓர் இளம் பெண்ணுக்குத் தன் காதலனைப் பிரிந்து வாழ்வதும் மறைவில் சந்திப்பதும் வருத்தத்தை உண்டாக்குகின்றன. அதனால் அவள் வாட்டமுற்று நிற்க, இது தெய்வத்தால் வந்த குற்ற மென்று அந்தப் பெண்ணின் தாய் பூசாரியை அழைத்து முருகனுக்குப் பூசை போடச் சொல்கிறாள். அந்தச் செய்தியைக் காதலன் வந்து மறைவில் நின்றபோது, தோழி தலைவிக்கு உரைப்பது போலச் சொல்லிப் புலப்படுத்துகிறாள். "பெண்ணே, இது என்ன வேடிக்கை! சிரிப்புக்கு இடமாக அல்லவா இருக்கிறது? தலைவனால் வந்த நோயைத் தீர்க்க அறியாத அன்னை, இது முருகனால் விளைந்ததென்று எண்ணி வெறியாட்டெடுப்பதற்குப் பூசாரியை வருவித்திருக்கிறாள். "மலைநாட்டுக்குத் தலைவனாகிய நின் காதலனால் வந்த நோயைத் தீர்க்கப் பூசாரி வருவானானால் அவன் மடையன்; அவன் பேச்சைக் கேட்டு முருகன் வந்தால் அவன் பூசாரியைவிட அறியாதவனே. அப்படிப் பூசாரி வெறியாடும் இடத்தில் ஆலமர் செல்வன் புதல்வன் வந்தால், தலைவனோடு திருமணம் நிகழும்படி வேண்டிக் கொள்வோம். அயலவர் மணம் இல்லாமல் அவனையே மணம் புரிந்து கொள்ளும்படி அருள்வாயாக என்று தொழுவோம்" என்று தோழி சொல்கிறாள்.

அதைக் கேட்ட தலைவன் தன் காதலியைத் திருமணம் செய்து கொள்ள முயலுகிறான்.

இந்தத் துறை அமையும்படி பத்துப் பாடல்கள் வருகின்றன. அப்பால் கண்ணகியை ஏத்திப் பாடும் பாடல்கள் உள்ளன.

"தன் நகிலால் மதுரையை எரித்த கண்ணகிக்குத் தேவர்கள் அவள் தலைவனைக் காட்டிக் கொடுத்த நிலையைப் பாடுவோம். அரசன் முறையினின்றும் வழுவ, மதுரையைத் தீயால் தண்டனை பெறும்படி செய்தவளைப் பாடுவோம். அப்படிப் பாடும்போது நம் தலைவனை மணக்கும்படி அருள வேண்டும் என்று வேண்டிக் கொள்வோம்." 'இவ்வாறு வேண்ட உரிய காதலனையே காதலி மணந்து கொண்டாள்' என்று அந்தப் பாடல்கள் முடிவு பெறுகின்றன. இறுதியில் இமயத்தில் வில்பொறித்துக் கொல்லி மலையை ஆண்ட சேரன் வாழ்க என்ற வாழ்த்தோடு குன்றக் குரவை என்ற முதற்காதை முடிகிறது.

★

இந்தக் காதையால் மலைநாட்டு மகளிர் அருவியாடிப் பாடும் வழக்கம் தெரிய வருகிறது. முருகனையும் பத்தினித் தெய்வத்தையும் வழிபடும் மரபும், அந்த வழிபாட்டினால் திருமணம் செய்து கொள்வதற்கு உரியவர்கள் தம் விருப்பம் நிறைவேறப் பெறுவார்கள் என்பதும் புலனாகின்றன.

குருவி, கிளி இவற்றை ஓட்டி, அருவியிலும் சுனையிலும் நீராடி இன்புறுவது மலைநாட்டு மகளிருக்கு இயல்பு. குறிஞ்சி நிலத்தில் முருகனை வழிபடுகையில் தொண்டகம், சிறுபறை என்பவற்றை முழக்குவார்கள். கொம்பு, மணி என்பவற்றையும் ஒலிப்பார்கள். அந்த நிலத்துக்கு உரிய பண் குறிஞ்சி. பூவால் அருச்சித்தலும் புகை காட்டலும் வழிபாட்டு வகைகள். முருகனுக்குப் பூசை போடுகிறவனுக்கு வேலன் என்று பெயர்.

முருகனைப் பற்றிய பல செய்திகள் சிலப்பதிகார காலத்துக்கு முன்பிருந்தே தமிழ் நாட்டில் வழங்கி வந்திருக்கின்றன. முருகன் வேலை ஏந்தியிருப்பவன்; ஆறுமுகங்களும் பன்னிரண்டு கரங்களும் செறிந்த தோளும் உடையவன்; பிணிமுகமென்னும் யானையும் மயிலும் ஊர்பவன்; கடம்பமாலை அணிபவன்; ஆலமர் செல்வனாகிய சிவபிரானுக்குப் புதல்வன்; மலைமகளுக்கு மகன்; சரவணப் பொய்கையில் அறுவர் பாலை உண்டான்; கிரௌஞ்சாசுரனை அழித்தான்; சூரனாகிய மாமரத்தைக் கொன்றான். வள்ளியெம்பெருமாட்டியை மணந்தவன். அப்பிராட்டி குறவர் குலத்தில் வளர்ந்தவள். அவனுக்குரிய தலங்களின் பெயர்களைக் காண்கிறோம்.

கண்ணகியினுடைய வரலாறுகளும் இதில் வருகின்றன. அவள் மதுரையைத் தன் நகில் ஒன்றால் எரித்ததையும் தேவர்கள் கோவலனோடு வந்து அவளை விமானத்தில் ஏற்றிச் சென்றதையும் இந்தக் காதை குறிக்கிறது.

பின்னே சேரன் செங்குட்டுவன் வஞ்சிமா நகரில் கோயில் எடுத்து வழிபாடு செய்வதற்கு முன்பே, குறிஞ்சி நில மக்கள் கண்ணகியின் தெய்வத் தன்மையை உணர்ந்து அவளை வழிபட்ட வரலாற்றைச் சொல்வது குன்றக் குரவை என்னும் பகுதி. சேர மன்னன் கோயில் எடுப்பதற்குக் காரணமே, மலைவளம் காணவந்த இடத்தில் மலைநாட்டுக் குறவர் தாம் கண்ட அற்புதக் காட்சியை அரசனுக்கு உரைத்ததே யாகும். ஆதலின் அவர்கள் பத்தினித் தெய்வத்தைத் தாம் வழிபட்டதன்றிப் பல மன்னர்களும் பிறரும் வழிபடுவதற்கு வழி கோலியவர்களும் ஆனார்கள்.